# FOREWORD

I FEEL honoured by the request of the author to link my name with his in his work **Sanmarga Deepam** which is, as its name implies, a Lamp of Righteousness. Ruskin has described the seven lamps of architecture as Sacrifice, Truth, Power, Beauty, Life, Memory and Obedience. The combined illumination of all these lamps may well be called the Lamp of Righteousness which is the illuminer of the architecture of the soul.

The great danger to modern civilisation consists in the lower aims of life overwhelming and driving out the higher aims of life. Materialism the worship of matter is rampant everywhere. Mammon threatens to unseat God. Soviet Russia has given God a constitutional notice to quit. It is not that man gives up God so much as God ceasing to illumine the soul of matter-intoxicated man. Even in countries and communities paying a lip homage to God, God is more present on the lips than in the hearts of man. The grim hunt for pleasure is in evidence everywhere. But the material sources of pleasure are limited and the mouths are many. Disappointed mouths shriek out curses

and disappointed hands have an itch for misappropriation and murder. Every nation is distracted by civil war and every decade witnesses a world war. The earth is plunging blindly along from convulsion to convulsion along the path of destruction.

What after all is the purpose of human life? It is physical and mental and moral and spiritual perfection consummating itself in the realisation of God. It can be expressed in one word—Culture. A recent writer speaks of "the long personal pilgrimage of culture". Culture means sweetness; culture means light; culture means harmony; culture means happiness. There can be no real culture unless there is an intermingling of the ideal and the real. There can be no real culture unless we preserve the simplicity and innocence of childhood while acquiring and adding the wisdom of maturity. We must not "lose the childlike in the larger mind". Christ has said "Suffer little children to come to unto me, for of such is the Kingdom of God."

The author has endeavoured in this work to introduce the youth of India into the ideal realm of ancient Indian culture and modern

Western culture so that every boy and girl of India might be Indian and modern in a state of harmonious concord. The heroic temperament—

"One equal temper of heroic hearts,
Made weak by time and fate, but strong in will
To strive, to seek, to find, and not to yield"—

is the prime need of India to-day. This work is sure to create such "equal temper of heroic hearts" and therefore deserves wide public appreciation and encouragement.

MADURA, 22nd Jan. 1933 — K. S. RAMASWAMI SASTRI, *District and Sessions Judge of Ramnad.*

# PREFACE

It is with great pleasure that I introduce this series, "**Sanmarga Deepam,**" to the Educational Public. The aim of this series, published in three small volumes, is to instil into our children valuable moral lessons and to teach them the importance and necessity of fellow-service and self-sacrifice.

I have dealt with a great number of useful topics which hold a high place in moral life. Importance has specially been paid to the chapters on Prayer, Duty, Patriotism, Truthfulness, Village Reconstruction, Co-operative and Labour movements. Here and there I have added some chapters on "Golden Sayings," which are quotations from the writings of eminent men and women of all times and of all ages, past and present. Lives of Vivekananda, Abraham Lincoln, Alva Edison, Sir C. V. Raman, Sir J. C. Bose, Tagore and other great humanitarians have been chosen as examples in order that their lessons of service to humanity may impress the minds of the young.

My grateful thanks are due to my friend, Mr. M. Rajamanikkam, for his beautiful verses

on the lives of these great men, which he has composed specially for this series. I am quite sure that the success of this attempt at creating a moral background for our children will be largely helped by the verses which in many places form chapters by themselves. The volumes have been so carefully graded both in the matter of language and choice of subjects that the Books I to III will be found immensely useful for Moral Instruction in schools, and being the first of its kind, it is hoped that the series will be received in the educational field with all popularity.

C. V. NARAYANA IYER

## உள்ளுறை

"உலகில் அன்பும் தியாகமும் ஓங்கி வளர்ந்து, மக்கள் அனைவரும் தம்மைப் போலப் பிறரையும் நேசிக்கத் தொடங்குவரே யானல், இவ்வுலகமே பூலோக சுவர்க்கமாக விளங்கும் என்பதில் ஐயம் யாது? அத்தகைய பூலோக சுவர்க்கமாக இவ்வுலகினை மாற்றச் செய்யும் அன்பும் தியாகமுமே ஒவ்வொருவரிடத்தும் விளங்குதல் வேண்டும்."

—டிக்கன் அம்மையார்



புத்த மகான்

# சன்மார்க்க தீபம்

## முதற் புத்தகம்

---

### 1. பிரார்த்தனை

1. உடலை வளர்க்க உணவு வேண்டற்பாலது. அங்ஙனமே உயிரை வளர்க்கப் பிரார்த்தனையும் வேண்டற்பாலது.

—காந்தியடிகள்

2. தூய மனத்தோடு செய்யப்படும் பிரார்த்தனை கடவுளால் வரவேற்கப்படும்.

—இரவீந்திர நாத தாகூர்

இவ்வகண்ட உலகினையும் உயர்திணை அஃறிணைப் பொருள்களையும் காண்கையில், இவற்றைப் படைத்த ஒப்பிலாப் பொருள் ஒன்று இருத்தல் வேண்டும் என்னும் உண்மையறிவு நமக்குத் தோன்றுகின்றது. அவ்வொப்பிலாப் பொருளையே நாம் கடவுள் என்கிறோம். அக்கடவுளை மனத் தூய்மையோடு செபித்தலே பிரார்த்தனை என்பது.

இப்பிரார்த்தனை மக்களாகப் பிறந்த நம் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத தென்பது மேற் கூறப்பெற்ற பெரியார்களின் அருள் மொழிகளி-

விருந்து ஐயமற விளங்குகின்றது. பிரார்த்தனை புரியும் நன்மைகளை உலகிற் சிறந்த பெரியாராய் விளங்கும் காந்தியடிகள் பின் வருமாறு கூறியுள்ளார் :

"பிரார்த்தனையே என் வாழ்க்கையை உயர்த்தி வருகின்றது. அஃது இல்லாவிடின், வெகு காலத்துக்கு முன்னரே எனக்குப் பித்துப் பிடித்திருக்கும். எனக்கு உண்டான மனக் கலக்கங்களும், வேறு பல துன்பங்களும் ஒழியச் சிறந்த கருவியாக இருந்தது பிரார்த்தனையே. முதலில் யான் கடவுளிடத்தும் பிரார்த்தனையினிடத்தும் நம்பிக்கை அற்றவனு யிருந்தேன்; அதன் பின்னரே, உடலை வளர்க்க உணவு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியமானது உயிரை வளர்க்கப் பிரார்த்தனையும் என்பதை உணர்ந்தேன். அந்நாள் முதல் இந்நாள்வரை நான் பிரார்த்தனை செய்து வருகின்றேன்.

"உலகத்தை உய்விக்கத் தோன்றிய பெரியார்களான புத்த மகானும் இயேசு நாதரும் முகம்மது நபியும் பிரார்த்தனை ஒன்றினுற்றான் ஞானோதயம் பெற்றனர் என்பதைச் சரித்திர வாயிலாக நாம் அறிகின்றோம். இன்றும் கோடிக் கணக்கான மக்கள் பிரார்த்தனையால் தூய வாழ்வும் மன அமைதியும் பெற்று வாழ்ந்து வருகின்றார்கள்.

"நான் பிரார்த்தனையைக் கைக்கொண்ட பின்னர் என் மனச் சாந்தத்தை இழந்ததில்லை. பிரார்த்தனையில் இன்ன முறையைத்தான் மேற்கொள்ள வேண்டும் என்னும் நியதி இல்லை. அவரவர் மத வொழுக்கத்-

துக்கு ஏற்ற முறையில் தூய மனத்தோடு பிரார்த்தனை புரிதலே சிறந்தது. நாள்தோறும் நமது அன்பை வெளியிட்டுப் பிரார்த்தனை கூறுதல் நமது கடமையாகும். நீங்கள் நாள்தோறும் பிரார்த்தனை செய்வீர்களாயின், சிறந்த ஒழுக்கத்தையும் நிறைந்த அறிவையும் தூய வாழ்வையும் பெறுவீர்கள் என்று தாழ்மையாய் அறிவித்துக்கொள்கின்றேன்.''

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே! தருநிழலே! நிழல்கனிந்த கனியே!
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே!
உகந்ததண்ணீ ரிடைமலர்ந்த சுகந்தமண மலரே!
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே!
மென்காற்றில் விளைசுகமே! சுகத்திலுறும் பயனே!
ஆடையிலே எனைமணந்த மணவாளா! பொதுவில்
ஆடுகின்ற அரசே! என் அலங்கலணிந் தருளே. 1

—அருட்பா—இராமலிங்க அடிகள்

அப்பா! நான் வேண்டுதல்கேட் டன்புறுதல் வேண்டும்;
அன்பே என் அகத்திருக்க அருள்புரிதல் வேண்டும்;
தப்பான வேற்றுமைகள் தகர்த்தெறிதல் வேண்டும்;
தாய்நாடு ஒற்றுமையில் தழைத்திடுதல் வேண்டும்;
எப்போதும் உழுதொழில் இங் கேற்றமுறல் வேண்டும்;
இணையின்றிக் கைத்தொழிலும் இலங்கிடுதல் வேண்டும்;
ஒப்பில்லாக் கல்விமுறை ஓங்கிடுதல் வேண்டும்;
ஒழுக்கமுறை தாய்நாட்டில் ஒளிர்தல்வேண் டுவனே. 2

—ம.ா. இராசமாணிக்கம்

## 2. உங்கள் கடமை

தாய்நாட்டு வீர மக்களே, வருங் காலத்தில் நமது நாட்டைப் பாதுகாப்பதற்குரிய நன்மக்களாக வேண்டியவர் நீவிரே யாவீர். நாட்டினை அழகுபடுத்திப் புலவர்களாகவும் வீரர்களாகவும் அறிஞர்களாகவும் விளங்க வேண்டியவர் நீவிரே. ஆதலின், இளமை முதற்கொண்டே உமது வாழ்க்கையைச் செம்மைப் படுத்திக்கொள்ள வேண்டுவது உமது கடமையாகும்.

நீவிர் எப்பொழுதும் சுறுசுறுப்பு உடையரா யிருத்தல் வேண்டும்; ஒரு நிமிட நேரமும் சோம்பி யிருத்தல் ஆகாது; கலங்காத உள்ளத்தை உடையரா யிருத்தல் அவசியம். எதற்கும் அஞ்சாப் பேராற்றல் வாய்ந்த இளஞ் சிங்கங்களாக நீவிர் விளங்குதல் வேண்டும். உம்மிடம் உண்மை, பொறுமை, ஒழுக்கம், ஊக்கம் முதலான சிறந்த குணங்கள் உயர்ந்து காணப்படல் வேண்டும். 'எக்காரியத்தையும் செய்து முடிப்போம்,' என்னும் தைரியம் உமக்கு மிகுதியும் இருத்தல் வேண்டும்.

உமது இளமைப் பருவம் துன்பம் நெருங்காப் பருவம்; வீரமும் தைரியமும் விளங்கும் பருவம்; அன்பும் அருளும் அரும்பும் பருவம்; சூடுள்ள உதிரம் உடலில் ஓடும் பருவம். இந்தப் பருவத்தில் நீங்கள் கொள்ளும் பழக்க வழக்கங்களே உங்கள் ஆயுள் முழுவதும் நீடித்திருக்கும். ஆதலின், இளமைப் பருவத்தையுடைய நீங்கள் நற்குண நற்செயல்களை உடை-

யவர்களாக இருந்தால், உங்கள் பிற்கால வாழ்க்கை மிக உயர்ந்த நிலையில் இருக்கும்.

முடியாது என்ற சொல் உங்கள் அகராதியில் இருத்தல் கூடாது. முடியாது என்பது சோம்பேறிக-ளின் வார்த்தை என்ற நெப்போலியன் வீர வார்த்தை எப்போதும் உங்கள் நினைவை விட்டு நீங்கலாகாது. எதையும் செய்யக் கூடிய வலிமையை நீங்கள் பெருக்-கிக்கொள்ள வேண்டும். அந்நிலையிற்றான் உங்களுக்கு அச்சம் என்பது தோன்றாது.

உம் உடலையும் அறிவையும் வளர்த்துக்கொள்ள வேண்டிய காலமும் இளமைப்பருவமே யாகும். ஆத-லின், உடலை வளர்த்தற்குரிய உடற்பயிற்சியை நீவிர், தினந்தோறும் பழகுதல் வேண்டும்; ஒவ்வொரு நாளும் நன்றாகக் கல்வி கற்க வேண்டும்; நம் தாய்மொழியாகிய தமிழைப் பிழையறக் கற்றல் அவசியம்; நம் முன்னோ-ரின் சரித்திரங்களையும் பிற நாட்டுப் பெரியோர்-வீர மக்கள் இவர்தம் வரலாறுகளையும் படித்தறிய வேண்டும்.

நம் நாடு முன்னேற்றம் அடைதற்குரிய சாத-னங்களை நீவிர் கற்றுக்கொள்ள வேண்டும்; கைத்தொ-ழில்-விவசாயம்-வாணிபம் இவற்றைப் பற்றிக் கூறும் நூல்களைப் படிப்படியாகப் படித்து, மேனாட்டு முறை-களையும் நம் நாட்டு முறைகளையும் ஒப்பிட்டுப் பார்த்துப் பெரியவர்களான பின், இம் மூன்றையும் உயர்த்தக் கூடிய முறைகளைக் கையாள வேண்டும். நமது நாட்டு

முன்னேற்றத்திலேயே நீவிர் கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண்டும்.

உங்கள் நாடு—உங்கள் மொழி—உங்கள் நாட்டு மக்கள்—உங்கள் தொழில்—இவற்றை நீவிர் என்றும் மறக்கலாகாது. நாட்டுப் பற்றும் உழைப்பும் மிக்கு-டைய மக்களாக நீவிர் விளங்குதல் வேண்டும். இறை-வன் உமக்கு இன்னருள் புரிவானாக.

ஊக்க முடையோமென் றூடு தம்பீ !
உண்மைபேசி வாழ்வோமென் றூடு தம்பீ !
ஏக்கந் தவிர்ப்போமென் றூடு தம்பீ !
எல்லோரும் வாழ்வோமென் றூடு தம்பீ ! 1

ஏழைகள்நம் சோதரரென் றூடு தம்பீ !
எல்லோரும் இந்தியரென் றூடு தம்பீ !
கோழைத் தனமொழியென் றூடு தம்பீ !
கோபம் ஒழிப்போமென் றூடு தம்பீ ! 2

உழைத்திங் குயர்வோமென் றூடு தம்பீ !
உழவை உயர்த்துவோமென் றூடு தம்பீ !
பழையன பேசோமென் றூடு தம்பீ !
பகர்வன செய்வோமென் றூடு தம்பீ ! 3

—சி. வி. நாராயண ஐயர்

—

## 3. அன்பே ஆண்டவன்

1. எவனது உள்ளத்தில் அன்பு குடிகொண்டு உள்ளதோ, அங்குத்தான் ஆண்டவன் குடியுள்ளான்.

—குரு. நானக்கு

2. அன்பு ஒன்றே ஆண்டவனை அடைவிக்கும்.

—இரவீந்திர நாத தாகூர்

அன்பு என்பது மக்கள் மனத்தே ஊறும் இன்ப நெகிழ்ச்சியாகும். உயர்ந்தோர்—தாழ்ந்தோர், அஃறிணைப் பொருள்கள் என்னும் வேறுபாடு இல்லாமல், எவ்வுயிரினிடத்தும் காட்டும் அன்பே உண்மையன்பு எனப்படும். அன்புநிலை யொன்றே ஆண்டவனைக் காட்டும். அதுவே வாழ்வைத் தூய்மையாக்கும் அருமருந்து என்பதைத் தம் அனுபவத்திற் கண்டு வரும் டீக்கன் என்னும் ஆங்கில அம்மையார் வெகு அழகாகக் கூறி யுள்ளதைக் காண்க:

"அன்பே தெய்வம். உண்மை அன்பு எங்குக் குடிகொண்டுள்ளதோ, அங்கே தெய்வம் குடியுள்ளது. அன்பு தெய்வ வடிவானது. எனது கடவுள் அன்பே யாகும். நான் யாவரிடத்தும் அன்பாய் இருத்தலையே எனது கடமையாகக் கொண்டிருக்கிறேன். என் அன்பு மயமான தெய்வம் எங்கும் நிறைந்து இருந்து உலகத்து உயிர்களை நேசித்து எல்லையற்ற அன்பின் பெருக்கால் காத்து வருகின்ற தென்பதே எனது நம்பிக்கையாகும்.

"அன்பை அடிப்படையாகக் கொண்டவர்க்குத் தியாகம் பெரிதன்று. அவர்கள் பிறர் பொருட்டே வாழ விரும்புகிறார்கள். அவர்கள் ஆண்களாயினும் பெண்களாயினும் உலக மக்கள் போற்றற்குரிய நிலையெய்துகின்றார்கள். இப்பெரியார்களின் தியாகத்தால் உலக மக்கள் நன்மை யடைந்துள்ளனர். தமக்கென வாழா இப்பெருமக்களால் உலகம் உய்கின்றது.

"உலகில் அன்பும் தியாகமும் ஓங்கி வளர்ந்து, மக்கள் அனைவரும் தம்மைப் போலப் பிறரையும் நேசிக்கத் தொடங்குவரோ யானால், இவ்வுலகமே பூலோக சுவர்க்கமாக விளங்கும் என்பதில் ஐயம் யாது? அத்தகைய பூலோக சுவர்க்கமாக இவ்வுலகினை மாற்றச் செய்யும் அன்பும் தியாகமுமே ஒவ்வொருவரிடத்தும் விளங்குதல் வேண்டும்."

எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன், பராபரமே! 1

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய், பராபரமே! 2

—பராபரக் கண்ணி-தாயுமானவர்

அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த வுடம்பு. 3

—திருக்குறள்-திருவள்ளுவர்

---

## 4. காலை அழகு

இயற்கைஎழில் மிகநிறைந்தே இன்பந்தரும் காலை;
இறைவனையும் உயிர்களையும் இணைத்திடுநற் காலை;
பயமொழித்துப் பலமளித்துப் பாதுகாக்கும் காலை;
பகர்வரிய கலைகள்தமைப் பண்படுத்தும் காலை;
இயற்கைதனில் இதயமதை ஈர்த்திடுமிக் காலை;
இன்னிசைகள் செவிக்குணவை இசைத்திடுநற் காலை;
'சயம்'என்றே செவிதனிலே சாற்றிடுநற் காலை;
'சுதந்தரத்தோ டிரு' என்றே சங்கதிரும் காலை. 1

பறவைகளைத் துயிலினின்றும் பரிந்தெழுப்பும் காலை;
பகர்வரிய மென்காற்றுப் பாண்மிழற்றும் காலை;
கறவைகளும் கன்றுகளும் களித்திடுநற் காலை;
கால்நடைகள் கண்விழித்தே களிநுகரும் காலை;
நறவருந்தும் வண்டினங்கள் நாதமிடும் காலை;
நம்பியரும் நங்கையரும் நீராடும் காலை;
பறவைகளும் தமிழ்மொழியில் பாட்டிசைக்கும் காலை;
பாவையரும் நாட்டுப்பற்றைப் பாலொடூட்டும் காலை.

மள்ளர்கள்தம் கருவிகளை மகிழ்ந்தெடுக்கும் காலை;
மாடுகளும் வயல்உழவில் மகிழ்ச்சிகொளும் காலை;
வள்ளத்தினிற் பழையதிட்டே உணவுண்ணும் காலை;
உழத்தியரும் நடைபழகி உகந்தேகும் காலை;
கள்ளவிழ்பூங் கோதையர்நற் கானம்செய்யும் காலை;
காளையர்நல் உடற்பயிற்சி கடிதியற்றும் காலை;
கள்சொரிந்து மலர்விரிந்தே கடிவீசும் காலை;
கதிரவனும் குணதிசையிற் களித்தெழுநற் காலை. 3

'ஒன்றுகுலம் ஒன்றுதெய்வம்' என்றுரைக்கும் காலே;
'ஓருயிரும் வருந்தாதே' என்றறையும் காலே;
'என்றுபிறர்க் குதவுவதே அறம்' என்னும் காலே;
'என்றென்றும் பெற்றோரை ஏற்றி(டு)' எனும் காலே;
'அன்போன்றே ஆண்டவனைக் காட்டும்' எனும் காலே;
'அழகொழுகும் இயற்கைகண்டே மகிழ்க' எனும் [காலே;
'என்புருக அன்புசெய்க' என்றிசைக்கும் காலே;
எவ்வுயிரும் என்னுயிரோ என்றுணர்த்தும் காலே. 4

—மா. இராசமாணிக்கம்

---

## 5. அன்பு மதமும் புத்த மகானும்

1. அன்பு ஒன்றே ஆண்டவனைக் காட்டும்.

—இயேசு நாதர்

2. நீங்கள் அன்பு கனிந்த உள்ளத்தவராய் இருங்கள்.

—முகம்மது நபி

அன்பையே ஆஸ்தியாகக் கொண்ட சித்தார்த்தர், உலகத் துன்பங்களை யொழிக்க வழி தேடத் தம் அரசையும் மனைவி மக்களையும் சுக போகங்களையும் துறந்து காட்டை யடைந்தார். அங்கு நீண்ட காலம் பிரார்த்தனை செய்து, முடிவில் ஞானோதயம் பெற்றுப் புத்த மகான் ஆனார். அவர் போதித்த மதத்துக்குப் புத்த மதம் அல்லது அன்பு மதம் என்று பெயர். 'எவ்வுயிர்க்கும் அன்பு செய்க' என்பதே அவரது திருவாக்காகும்.

அவர் ஒரு நாள் மலைப் பக்கத்தில் நின்று எதையோ பார்த்துக்கொண்டு இருந்தார். சிறிது நேரத்திற்குள் அவ்வழியே பல இடையர் ஆயிரம் ஆடுகளை ஓட்டிக் கொண்டு வந்தனர். புத்தர் அவர்களை நோக்கி, "நீவிர் இவ்வாடுகளை எங்குக் கொண்டுசெல்கிறீர்?" என்று கேட்டார்.

இடையர், "ஐயா, நாங்கள் இவற்றைப் பிம்பிசாரன் நடத்தும் யாகத்திற்குக் கொண்டுசெல்கிறோம். இவை அந்த யாகத்தில் வெட்டப்படும்," என்றனர்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட புத்தர் மனம் நெருப்பிற்பட்ட புழுப்போலத் துடித்தது. அவர் கண்களிலிருந்து 'மட மட' என்று நீர் வடிந்தது. அன்பே உருக்கொண்டு வந்த அப்பெரியார், "அந்தோ! இத்தனை உயிர்களும் வீணாகக் கொல்லப்படுமே! இவற்றை எவ்விதத்தும் காப்பாற்ற வேண்டும்," என்று தம்முள் கூறி, இடையர்களைப் பின் தொடர்ந்து சென்றார்.

வழியில் சிறிய ஆட்டுக் குட்டி ஒன்று நடக்க முடியாமல் தவித்தது. அதைக் கண்ட புத்தர் மனம் கரைந்தது. அவர் விழி நீர் வார, அச்சிறிய ஆட்டுக் குட்டியை எடுத்துத் தம் கட்கத்தில் வைத்துக்கொண்டு சென்றார்; முடிவில் யாகசாலையை அடைந்தார்; பிம்பிசாரனைக் கண்டார்.

அவர் அவனை நோக்கி, "அரசே, நீர் யாகம் செய்வதாகக் கேள்வியுற்றேன். இவ்வாயில்லா வுயிர்-

களைக் கொல்லாமல் யாகம் செய்யலாகாதோ? அங்ஙனம் செய்யப்படும் யாகம் கடவுளுக்கு விருப்பமாயிராதோ? ஓர் உயிரைக்கொல்ல நமக்கு உரிமையுண்டோ? கொன்ற ஒன்றுக்கு மீண்டும் உயிர் கொடுக்க நம்மால் இயலுமா? பிம்பிசாரரே, நீர் அறிவுள்ளவராதலின், நான் கூறியவற்றை நியாயமென ஒப்புக்கொள்வீர் என்று நம்புகிறேன்," என்றார்.

புத்த மகான் கூறிய ஒவ்வொரு சொல்லும் அரசன் மனத்தைக் கலக்கியது; அவனிடம் குடியிருந்த அறியாமை யென்னும் பெருங் கட்டியைக் கரைத்தது. அறியாமை மறையவே, அரசன் அறிவுடையவன் ஆனான். மகான் கூறியவை நியாயமானவை என அவன் உள்ளத்தில் இருந்து ஓர் எண்ணம் உதித்தது. அக்கணமே அவன் ஆயிரம் ஆடுகளையும் இடையர்க்கே அளித்துவிட்டு, உயிர்ப் பலி இல்லாமலே யாகத்தை முற்றுவித்தான்.

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் ; பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன் ;
நீடிய பிணியால் வருந்துகின் றோர்என்
நேருறக் கண்டுளம் துடித்தேன் ;
ஈடின்மா னிகளாய் ஏழைக ளாய்நெஞ்(சு)
இளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன். 1

நலிதரு சிறிய தெய்வமென் றையோ !
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்
பலிக்கடா முதலிய வுயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே
புந்திநொந் துளநடுக் குற்றேன் ;
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில்
கண்டகா லத்திலும் பயந்தேன். 2

துன்னெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்
தொடங்கிய போதெலாம் பயந்தேன் ;
கண்ணினால் ஐயோ ! பிறவுயிர் பதைக்கக்
கண்டகா லத்திலும் பதைத்தேன் ;
மண்ணினில் வலையும் தூண்டிலும் கண்ணி
வகைகளும் கண்டபோ தெல்லாம்
எண்ணிஎன் உள்ளம் நடுங்கிய நடுக்கம்
எந்தை ! நின் திருவுளம் அறியும். 3

—அருட்பா—இராமலிங்க அடிகள்

---

## 6. அமுத மொழிகள்

1. நல்ல ஒழுக்கமே உயர்ந்த ஆபரணம்.

2. மன நேர்மையே இன்பம்; மனக் கோணலே துன்பம்.

3. முயற்சி எவ்வளவோ, பயனும் அவ்வளவே. காலம் என்றேனும், யோகம் என்றேனும் ஒன்றில்லை.

4. பாடு பட்டால்தான் ஒருவன் பயன் பெறக் கூடும்.

5. உயர்ந்த எண்ணங்கள் ஒருவனை உயர்ந்தவனாக்கும். தாழ்ந்த எண்ணங்கள் ஒருவனைத் தாழ்ந்தவனாக்கும்.

6. நீங்கள் எதிலும் உங்கள் மனத்தை அரை குறையாகச் செலுத்தாதீர்கள்.

—ஜேம்ஸ் ஆலன்

7. சுத்தமா யிருத்தல் பக்தியா யிருத்தலுக்கு அடுத்த படியாகும்.

—வெஸ்லி

8. மகிழ்ச்சியே உடல் நலத்துக்கு முக்கிய காரணம்.

—மார்பி

9. காலத்தின் விலையை அறிந்துகொள். காலமே உன் உயிர். அதனை வீணாக்குவது உன்னை நீயே கொலை செய்துகொள்வதைப் போலாம்.

—சார்ல்ஸ் வாக்னர்

10. ‘இயலாது’ என்பது என் அகராதியில் இல்லை.

—நெப்போலியன்

11. எதையும் யோசித்துச் செய்பவன் நன்னிலையை யடைவான்.

—ஹென்றி போர்டு

12. முயற்சி யுடையார் உயர்ச்சி பெறுவார்.

—இராம்சே மாக்டோனல்டு

---

## 7. சைவ உணவு

1. ஊனைத் தின்று ஊனைப் பெருக்காமை இனிதே.

விளம்பி நாகனார்

2. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்.

—திருவள்ளுவர்

3. மனிதன் தன் போன்ற உயிர்களின் ஊனைத் தின்று
உடலை வளர்ப்பது அடாது.

—காந்தியடிகள்

உடல் நலத்தைப் பேணுதற்கு மரக்கறி உணவே பெரிதும் வேண்டற்பாலது. எக்காரணத்தைக் கொண்டும் இறைச்சியை உண்ணுதல் பெருந்தவறு. பலவகை உணவுப் பொருள்களையும் சோதித்துப் பார்க்கையில் பாலும் கீரையுமே சிறந்த உணவுப் பொருள்களாகக் காணப்படுகின்றன. பிற உணவுப் பொருள்களில் உள்ள குண பேதங்களையும் சமனாக்கும் திறமை இவற்றிற்கு

அமைந்துள்ளது. இவ்விரண்டைத் தவிர வேறு பொருள்களுக்கு இக்குணமே இல்லை. ஆதலின், சிறந்த வைத்திய நிபுணர்கள் பாலும் கீரையுமே சிறந்தவை யெனக் கூறுகின்றார்கள்.

இரண்டாவதாகப் பழவகைகள், கோதுமை முதலிய தானிய வகைகள், கிழங்கு வகைகள் இவற்றை உண்ணுதல் சாலச் சிறந்தது. கோதுமையில் சிறந்த உணவுச் சத்து இருக்கின்றது. இதனைக் கோதுமை யுணவு கொள்ளும் பாஞ்சால நாட்டு மக்களின் உடல் உரத்தைக் கொண்டு கண்டுகொள்ளலாம். நாம் உண்ணும் அரிசி உணவில் ஒருவித விசேடச் சத்தும் இல்லை. முதலில் அரிசியை எவ்வளவுக் கெவ்வளவு குற்றித் தவிட்டைப் போக்குகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு அதன் உணவுச் சத்தும் குறைந்து போகிறது. அன்றியும், சாதம் வெந்த பிறகு, அதிலுள்ள கஞ்சியை வடித்து விடுவதால், அரிசியில் எஞ்சி யிருந்த உணவுச் சத்தும் நீங்கி விடுகிறது. ஆதலால், அரிசியை அதிகமாகக் குற்றிச் சத்தைப் பாழாக்காமல், பதமாகக் குத்தி உபயோகித்தல் வேண்டும்.

காய்கறி, கூலவகைகள் முதலான இயற்கையாகக் கிடைக்கும் இவ்வுணவுப் பொருள்களை விட்டு, உயிர்களை வதைத்து உண்பது கொடிய செய்கையன்றோ? புலால் நீங்க, உண்ணும் உணவே சைவ உணவு எனப்படும். அச் சைவ உணவைப் பற்றிக் காந்தியடிகள் பின் வருமாறு கூறியுள்ளார்:

"சைவ உணவே மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது. தூய ஒழுக்கத்திற்கு ஊன்றுகோல் அதுவேயாகும். பலர் நோய்களால் அவதிப்படும்போது, நோய் நீங்குவதற்குப் புலால் உணவை நீக்கி, நோய் நீங்கியதும் மீண்டும் புலால் உணவைக் கொள்கின்றனர். இவ்வித மன மாற்றத்தால் பயன் என்ன? ஆன்மார்த்தமாக—பகுத்தறிவுக்கு ஒப்ப—புலால் உணவை நீக்குதல் அன்றோ சிறந்தது! சுய நலத்துக்காக உண்பதும், விடுவதும்—மீண்டும் தொடர்வதும் நன்றன்று! ஏனெனில், சுய நலத்தோடு செய்யும் எக்காரியமும் ஒருவனை முன்னிலைக்குக் கொண்டு செல்லாது.

"மரக்கறி யுண்போரும் சில விதிகளைப் பின்பற்ற வேண்டும்: அவர்கள் வயிறு வெடிக்கும்படி உண்ணலாகாது. அத்தகையோர் ஒரு நாளும் சுகத்துடன் வாழ இயலாது. சரீரப் பாதுகாப்புக்கான உணவையே கொள்ள வேண்டும் என்பதை ஒவ்வொருவரும் கவனிக்க வேண்டுகிறேன். ஆகவே, நல்ல உடல்நலம் ஒருவனுக்குத் தேவையானால், அவன் ஒரு நாளில் பல முறை உண்ணும் வழக்கத்தையும் விட்டு, அளவுக்கு அதிகமாக வயிற்றை நிரப்புவதையும் நிறுத்த வேண்டும். உணவு குறைவாகக் கொண்டாலும் கொள்ளலாமே அன்றி, அதிகமாகக் கொள்ளலாகாது. ஆதலின் நான், என்னிடம் வரும் விருந்தினரை அதிகமாக உண்ணும்படி வற்புறுத்துவதில்லை.

"உடல் வளப்பத்தை விட மனத் தூய்மையே ஒருவனுக்கு மிக்க அவசியமானது. மாமிச உணவை

உண்டு வாழும் மிருகமாக மனிதன் இருக்க முடியாது. காய், கனி, கிழங்கு, தானியங்கள் இவற்றை உண்டே மனிதன் வாழ வேண்டியவன். மாட்டுச் சூப்போ, மாமிசமோ சாப்பிடாவிடின், நான் மாண்டுபோவேன் என்று வைத்தியர் ஒரு சமயம் கூறுவாருயின், நான் மரணத்தை யாயினும் அன்புடன் ஏற்றுக்கொள்வேனே யல்லாமல் அவ்வித உணவை ஒரு போதும் ஏற்றுக்கொள்ள மாட்டேன். ஆகவே, மக்கள் சுகாதாரத்தை மட்டும் கவனித்துக்கொண்டு நின்றுவிடாமல், அன்பு தழுவிய நல்லொழுக்கத்தையும் பின்பற்றுமாறு வேண்டுகின்றேன்."

காய்இலை கிழங்கே தக்க
  கறிகளாம்; அவற்றை உண்போர்
ஆயுள்நாள் வளரும்; ஊழ்த்தல்
  அருந்துவோர் உயிர்கட் கெல்லாம்
தாயெனும் ஒருக ருத்தன்
  சாபத்தைப் பரிப்பார் என்னின்,
பேயினும் கொடிய அன்னூர்
  பிழைக்குமா றெவன்கொல்? அம்மா!

—நீதி நூல்-வேதநாயகம் பிள்ளை

## 8. மதம் என்பது யாது ?

1. அன்பை அடிப்படையாகக் கொண்ட ஒழுக்கமே மதம் எனப்படும்.

—இராமகிருஷ்ணர்

2. அன்பு நெறியால் உலகம் உய்ய வழி கூறும் முறையே மதம் எனப்படும்.

—விவேகானந்தர்

சரித்திரங் கண்ட அளவில் உலகில் தோன்றிய மதங்கள் எல்லாம் அன்பையே அடிப்படையாகக் கொண்டவை. உள்ளுணர்ச்சியின் நல்ல நெகிழ்ச்சியே அன்பு என்பது. 'உயிர் என்னும் மரத்துக்கு ஆணி வேர் அன்பே யாகும்; உயிர்களை நேசிப்பதே உன் உயிரை வளர்ப்பதாகும்' என்னும் இயேசு நாதரின் அறவுரை பொன்னேபோலப் போற்றத் தக்கது. 'பிறரை வெறுக்காமல், யாவரிடமும் அன்பு செலுத்துவோன் கடவுளுக்கு மிக நெருங்கியவனாகிறான்' என்ற கண்ணன் கனிவுரையும் கருத்தில் இருத்தத் தக்கது. இவ்விரண்டு பொன் மொழிகளாலும், அன்பை அடிப்படையாகக் கொண்ட ஒழுக்கமே மதம்; அன்புடையான் மதமுடையான்; அன்பு மதமே உண்மை மதம்; அதுவே சன்மார்க்கம் என்பன தெள்ளிதிற் புலனாகின்றன அல்லவா ?

இத்தகைய அன்பு மதத்தை அறிவுறுத்தி மறைந்தவர்களே புத்த மகான், இயேசு நாதர், முகம்மது நபி

முதலானோர். அவர்கள் தங்கள் முடிவான லட்சியங்களை யடையும்பொருட்டு எவ்வளவோ தியாகங்களைச் செய்துள்ளார்கள். இவ்வாறு தங்கள் இலட்சியங்கள் பூர்த்தியாக ஏற்பட்ட துன்பங்கள் பலவற்றைச் சிறிதேனும் மனந் தளராமல் பொறுத்துக்கொண்டு பாடுபட்ட பெருமக்களே மக்கள் வணங்கிப் போற்றற்கு உரியவர்கள். அவர்கள் வரலாறுகளை உள்ளவாறு உணர்ந்தால், உண்மை மதம் எது என்பது எளிதில் விளங்கும்.

சித்தார்த்தர் அன்பு மதத்தைப் போதிக்க விரும்பி, தம் அரசையும், பெற்றோரையும் மனைவி மக்களையும், எல்லாச் சுக போகங்களையும் முற்றும் துறந்து காடு புகுந்து, ஞானோதயம் பெற்றுப் புத்த மகான் ஆனார். தன்னலம் இல்லா இப்பரம புருடரின் தியாகத்தால் உலக மக்கள் மிக்க முன்னேற்ற ஒழுக்கம் பெற்றனர். இவர் அரிய உபதேசங்களினின்று, அன்பே சிறந்தது; அதுவே மதம்; அதுவே உயிர் நாடி என்பன அங்கைக் கனிபோல் ஐயமற விளங்கும்.

அன்பு மதத்தைப் பரப்பத் தோன்றிய அடுத்த பெரியார் இயேசு நாதர் ஆவர். அவருடைய போதனைகளின் சத்தெல்லாம் அன்பே யாகும். 'தன்னைக் கொல்ல வரும் பகைவனையும் அன்பினால் வெல்ல வேண்டும்' என்னும் அரிய முறையைக் கற்பித்தவர் இயேசு நாதரே யாவர். அவர் பல துன்பங்களுக்கு இலக்கானார்; அறிவீனத்தால் அல்லலுறும் எளிய மக்கள் உய்ய, அன்பு மதத்தைப் பரப்பிக் கொடியரால்

சிலுவையில் அறையுண்டார் எனின், அவர்தம் பெரு-மையை என்னென்பது!

முகம்மது நபி, அக்கால அரேபியரின் பழக்க வழக்கங்களில் வெறுப்புற்று, மக்களின் கொடுஞ் செயல்கள்—தீய ஒழுக்கம் முதலியவை அன்பாற்றான் அகற்றக் கூடும் என்பதை நன்குணர்ந்து, அன்பு மதமாகிய இஸ்லாமிய மதத்தைப் பரப்பத் துணிந்தார். அவருக்கு அம்முயற்சியில் நேர்ந்த துன்பங்கள் பல. பலர் அவரைக் கொல்லப் போந்தனர். அவர்களையும் நபி நாயகம் அன்புடன் வரவேற்றார். 'கொடிய பகைவனையும்—கொடிய விலங்கையும் அன்புடன் நடத்து; நீ, அன்பினால் கொடிய பகைவனையும் விலங்கையும் வசப்படுத்தலாம். அன்புக்குக் கட்டுப்படாத உயிர் இல்லை,' என்பதே நபி நாயகத்தின் அருள் வாக்காகும்.

எனவே, அன்புள்ள பிள்ளைகளே, மதம் என்பது அன்பே; அவ்வன்பு மதத்தைப் பரப்புதலே சிறந்த கடமை; அன்பு நெறியே பின்பற்றத் தக்கது; அதுவே உலகத்தை உய்விக்கும்; என்பன தெள்ளிதில் விளங்குகின்றன அல்லவா?

---

# 9. சிரிப்பின் சிறப்பு

1. நாம் சிரிக்காத நாள் வீண் நாளே.

—சாம்நுபா

2. எனக்கு உண்டான நோயின் துன்பங்களை எல்லாம் மகிழ்ச்சியினாலேயே கடந்துவிட்டேன்.

—ஸ்டர்ன்

சிரிப்பு என்பது மகிழ்ச்சியின் அறிகுறியாகும். சிரிக்கும் தொழில் பிற தொழில்களைவிட ஒரு மனிதனுக்கு மிகச் சிறந்தது. இதனால் நன்மை உண்டென்றே கடவுள் இதனை நமக்கு அளித்துள்ளார். சிறந்த வைத்திய நிபுணர் பலர் சிரிப்பின் சிறப்பைப் பின் வருமாறு கூறுகின்றனர்:

"சிரிப்பு உடலுக்குள் இருக்கும் உறுப்புகட்கு அசைவு கொடுக்கவும், அதே வேளையில் மனிதனுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கவும் அமைந்துள்ள இயற்கைச் சாதனமாகும். இதன் தொழில் நுரையீரலில் தொடங்கி, அங்கிருந்து முறையே கல்லீரல், இரைப்பை முதலிய உள் உறுப்புகளை விரைவாய் அசையுமாறு செய்கின்றது. அதனால், இருதயம் வேகமாய்த் துடிக்கின்றது. ஆதலால், இரத்த ஓட்டமும் காற்று உட்கொள்ளுதலும் வெளிவிடுதலும் அதிகரித்து, உடலுக்கு வெப்பத்தை யளித்து அதற்கு ஒரு வித ஒளியைத் தருகின்றது. சிரிப்பினால் கண்கள் பிரகாசம் பெறுகின்றன. மார்பு அகன்று விரிகின்றது. இவற்றால் அழகிய உடல் நிலை அமைகின்றது. சுருங்கக்

கூறின், சிரிப்பு, உடலில் உள்ள எல்லா உறுப்புகளின் தொழில்கள் அனைத்தையும் ஒரே காலத்தில் நிகழ்த்தி, உடல் நிலையை ஒழுங்குபடுத்துகின்றது.

"சிறப்பாக வைத்திய நிபுணர் பலர் மலர்ந்த முகத்தோடு இருப்பதைக் காணலாம். மாத்திரைகளைவிட அவர்களே சிறந்த மருந்து போன்றவர்கள். நோயாளிகளை மலர்ந்த முகத்தோடு வரவேற்று, அவர்கட்கு நல்லறிவு கொளுத்தும் வைத்திய நிபுணர்களையே மக்கள் விரும்புகிறார்கள். சிலர் சிறந்த மருந்துகளை வைத்திருப்பினும், அவர்களிடம் மக்கள் விரும்பிச் செல்வதில்லை. ஏன்? மக்கள் சிரிப்புத் தவழும் முகத்தை விரும்புகிறார்களே யல்லாமல், கடுகடுப்பான முகத்தை விரும்புகிறார்களில்லை."

புன்சிரிப்பு உடல் நலத்துக்கு ஏற்ற துணையாகும் இதுவே நமக்குச் சிறந்த மருந்தாகும். எமர்சன் என்னும் ஆங்கில அறிஞர் எப்போதும் சிரித்த முகத்துடனே விளங்குவராம். அவர் முகத் தோற்றத்தைக் கண்டதும், அவர் நண்பர்கள் தங்கள் கவலைகளை விட்டுக் களி கொள்வராம். 'ஒரு மனிதன் புன் சிரிப்புக் காட்டும் போதும், சிரிக்கும் போதும் அவனது ஆயுள் வளர்ச்சி யடைகிறது' என்று ஜெர்மன் வைத்திய நிபுணர் ஒருவர் கூறுகின்றார். நம் வாழ்க்கையிலும் துக்கத்தைவிட மகிழ்ச்சியையே நாம் பெரிதும் விரும்புகின்றோம். நாம் எந்நிலை எய்தினும், இயன்ற வரை மன மகிழ்ச்சியோடு இருத்தல் மிக்க நன்மை பயக்கும்.

ஆங்கில ஆசிரியரான சர். வால்டர் ஸ்காட் என்னும் அறிஞர் எப்போதும் அன்று மலர்ந்த தாமரை போல மலர்ந்த முகத்துடன் காணப்படுவார். அவர் தம்மைப் போலவே பிறரையும் மலர்ந்த முகத்துடன் இருக்கத் தூண்டுபவர். 'உலகில் அவர் ஒரு சுக புருடர்' என்றே மேனுட்டார் அவரை மதித்து வந்தனர். அவரது புன் சிரிப்பால் அவர் மேனுட்டார் அனைவரையும் தம் வசப்படுத்தினர். அவரைப் போன்றே கிராம் வெல் என்பவரும் மகிழ்ச்சியை நுகர்ந்த மைந்தர். எவ்விதத் துன்பம் நேர்ந்த காலத்தும், அவர் மன மகிழ்ச்சியோடு இருந்தவர் எனச் சரித்திர ஆசிரியர் கூறுகின்றனர்.

பிள்ளைகளே, மேற்கூறிய உண்மைகளால், சிரிப்பின் சிறப்பையும் அத்தொழிலின் அவசியத்தையும் அறிந்து கொண்டீர்கள் அல்லவா? நீங்கள் ஒவ்வொருவரும் நன்ருய்ச் சிரிக்கப் பழக வேண்டும். நீங்கள் உங்கள் வாழ்வில் வெற்றி பெற வேண்டுமாயின், எப்போதும் உங்கள் முகத்தில் புன் சிரிப்புத் தவழ்தல் வேண்டும். அதுவே உங்கள் உடல் நலத்துக்கேற்ற அருமருந்தாகும்.

---

## 10. முயற்சி

மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண்துஞ்சார்,
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்,—செவ்வி
அருமையும் பாரார், அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். 1

—நீதிநெறி விளக்கம்—குமரகுருபரர்

தெய்வத்தா லாகா தெனினு, முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 2

—திருக்குறள்—திருவள்ளுவர்



முயற்சி தனைக்கொண்டு மேன்மேல் உழைத்திங்(கு)
உயர்ச்சிபெற்றார் லாயிட்ஜார்ஜ் ஓதும்;—உயர்ச்சிசால்
இன்மொழியாய்! ஊக்கத் திடருறினும் எண்ணாது
நன்மையுறல் நல்லோர் தொழில். 3



விளக்கெண்ணெ யாலாம் விளக்கைமின் சார
விளக்காக்கி னார்எடிசன் விள்ளின்;—துளக்கில்
முயற்சி தனைக்கொண்டு முன்னியுழைத் தன்றோ
நயமுறுநற் பேற்றினைப்பெற் றார்! 4



குடிசை தனிற்பிறந்து கோடீச் சுரராம்
எடிசனைப் போன்றனென்றி போர்டு;—கடிகுழலாய்!

மோட்டார் செயக்கற்று முன்னூற் றுழைத்தன்றோ
மோட்டார்வேந் தானார் முயன்று. 5



மீன்பிடித்து விற்றுய்ந்த மேனாட்டு மாக்டொனால்டு
மேன்மை யுறுமமைச்சா மேவினார்;—தேன்மொழியே!
மீன்பிடிக்கும் வேலைவிட்டு மேலாம் முயற்சிதனால்
கோனெனவே வாழ்வர்திருக் கொண்டு. 6

ஊக்க மதுகொண் டுழைப்பின், உயர்நிலையை
எக்க மறப்பெறலாம் எப்போதும்;—வாக்கினியாய்!
வேறு பொருளேது வீறுடையார்க் கீதன்றிப்
பேறுபெற நன்முயற்சி பேண். 7

வானத் திருந்தோன்றும் வாராதிங் குன்னிடத்தே
தானாக; இஃதுண்மை ; தம்பி ! கேள் :—ஆனதால்,
யோகமதை நம்பாதே: யோசனையார் நன்முயற்சி
ஏகமனத் தோடுசெய்வாய் ஈங்கு. 8

—மா. இராசமாணிக்கம்

---

## 11. பத்திரிகை யளிக்கும் பயன்

1. பத்திரிகை வாசித்தலை உன் ஒரு நாளைய வேலைகளில் ஒன்றாகக் கொள்.

—காந்தியடிகள்

2. தினந்தோறும் பத்திரிகை வாசித்தலால் தாய்நாட்டு நிலைமையையும் பிற நாடுகளின் நிலைமையையும் தெரிந்து கொள்ளலாம். நமது அறிவும் பெருகும்.

—இராமானந்த சாட்டர்ஜி

ஒரு நாடு எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் அடைந்து சிறப்படைவதற்குப் பத்திரிகைகள் மிகவும் இன்றியமையாதவை. நவீன நாகரிக முன்னேற்றத்திலும் பல்கலை விற்பன்னத்திலும் தினந்தோறும் வளர்பிறைபோலப் பெருகி வரும் அமெரிக்கா முதலிய நாடுகள் பத்திரிகையின் பயனை நன்கறிந்து அனுபவித்து வருவதாற்றான் மேனிலையை யடைந்துள்ளன.

அங்குப் பொருள் மிகுந்த செல்வர் முதல் அன்றாடம் வயிற்றுச் சோற்றுக்கு வருந்தி யுழைக்கும் ஏழைத் தொழிலாளர் ஈறாக, அனைவரும் ஒவ்வொரு நாளும் பத்திரிகை வாசியாதிரார்; தாம் ஒரு நாளில் செய்ய வேண்டிய பல வேலைகளுள் பத்திரிகை வாசித்தலை-யும் ஒரு வேலை யெனக் கொண்டிருத்தல், பத்திரிகை-யின் பயனை அவர்கள் நன்கறிந்தவர்கள் என்பதைக் காட்டுகிறதன்றோ?

கல்வி, கைத்தொழில், வாணிகம், விவசாயம் முதலியவை உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டிலும் எவ்வெவ் வகையில் உயர்ந்தும் தாழ்ந்தும் உள்ளன என்பன போன்ற சிறந்த செய்திகளும்; அரசியல் காரியங்களும், உலக விநோதங்களும்; நாட்டு முன்-னேற்றத்துக்கு உரிய பல வழிகளும்; பற்பல நீதிகள் நிறைந்த நிகழ்ச்சிகளும்; அரிய உபதேசங்களும், போர்ச் செய்திகளும், பிறவும் ஒவ்வொரு நாளும் பத்-திரிகைகளில் வெளியாகின்றன.

ஒரு நாடு முன்னேற்றம் அடையும் விதத்தைப் பிறிதொரு நாடு பத்திரிகைகளைக் கொண்டு அறிந்து முன்னேறுவதற்கு வழி யுண்டாகிறது; இங்ஙனமே கைத்தொழில்—விவசாயம்—வாணிகம்— இவற்றைப் பெருக்கிக் கொள்ளவும் அஃது உதவுகின்றது. ‘இன்று அமெரிக்காவில் ஒரு நூதன இயந்திரம் கண்டு பிடிக்கப்பட்டது’ என்ற தலையங்கத்தோடு, அது கண்டு பிடிக்கப்பட்ட வரலாறு அடங்கிய பத்திரிகை-யைப் படிக்கும் பிறநாட் டறிஞர், தாமும் முயன்று,

அவ்வித யந்திரத்தைச் செய்து முடித்து அதனால் அமெரிக்கர் அடையும் நலன்களைத் தாமும் அடைகின்றனர். இவ்வாறே, ஒவ்வொரு துறையிலும் ஒவ்வொரு நாடும் முன்னேற்றம் அடையப் பத்திரிகைகள் பயன்படுகின்றன.

அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய நாகரிக நாடுகளில் எண்ணிறந்த பத்திரிகைகள் இருக்கின்றன. அவற்றால் அந்நாட்டு மக்கள் அடையும் நன்மைகள் மிகப் பல. நம் தாய் நாட்டிலோ, பெரும் பகுதியினர் உலகச் செய்திகளை யறிந்துகொள்ள ஆவலின்றிக் கிணற்றுத் தவளைகளைப் போலத் தம் வாணாட்களை வீணில் கழிக்கின்றனர். கல்வியும் செல்வமும் பெற்ற மக்களும் பத்திரிகை படிப்பதில் ஊக்கங் காட்டுவதில்லை. எனினும், இப்போது நமது தமிழ் நாட்டில் பல பத்திரிகைகள் வெளியாகின்றன. அவற்றுள் தினசரிப் பத்திரிகைகளே உலகச் செய்திகளை அன்றாடம் உணர்த்துவன.

மேனாட்டு மாணவர்கள் பத்திரிகைகளைத் தினந்தோறும் படிக்கின்றார்கள். உலகச் செய்திகளை யறிவது கல்வியின் ஓர் அம்சம் என்பது அவர்கள் கருத்தாகும். அவர்களைப் போல நீங்களும் தினந்தோறும் பத்திரிகைகளைப் படித்துப் பயன் பெறுக.

---

## 12. தெருக் கூட்டுவோன் தெரிவிப்பதென் ?

1. தூய்மையுடையவன் கடவுளை மிக நெருங்கியவனாகின்றான்.

—விவேகானந்தர்

2 தூய்மை என்பது கடவுள் தன்மைக்கு அடுத்த படியாகும்.

—ஓர் ஆங்கிலப் பழமொழி

தூய்மை அல்லது பரிசுத்தம் என்பது அகத் தூய்மை, புறத் தூய்மை என இரு வகைப்படும். இரண்டினையும் சீர்தூக்கிப் பார்த்தால், அகத் தூய்மையே மிகச் சிறந்தது என்பது புலனாகும். எனினும், புறத் தூய்மை இன்றியமையாததே. எல்லா மத நூல்களும் கடவுள் தூயவர் என்று கூறுகின்றன. ஏனெனில், அவர் குற்றமற்றவர்; பரிசுத்தமானவர். ஆகவே, குற்றமற்றவன், தூய்மையுடையவன்—பரிசுத்தமானவன் ஆகின்றான். இந்நிலையே கடவுளுக்கு அடுத்த நிலையாகும்.

ஒருவன் அகத்தும் புறத்தும் தூய்மையுடையனாய் இருந்தாற்றான் 'தூயவன்' எனப்படுவான். காலையில் தெருக் கூட்டுவோனைக் கவனியுங்கள்: அவன் கையில் நீண்ட மூங்கிற் கழியை வைத்துக்கொண்டு, அதன் அடியில் உள்ள கருவியால் தெருவில் உள்ள அசுத்தங்களை எடுத்துத் தெருவைத் தூய்மைப் படுத்துகின்றான். அவன் நமக்குக் கற்பிப்பதுதான் யாது? அவன் கையில் உள்ள கருவியே நமது போது அறிவு; தெருவில் கிடக்கும் அசுத்தங்களே நம் அகத்-

துள் இருந்து வரும் கெட்ட நினைப்புகள். அவன், தெருவில் கிடக்கும் அசுத்தப் பொருள்களை அப்புறப்படுத்தித் தூய்மைப்படுத்துவது போல, நாமும் நம் அகத்தே புதைந்து கிடக்கும் தீய நினைப்புகளை அறிவென்னும் தூய்மைசெய்யுங் கருவியால் அப்புறப்படுத்த வேண்டும் என்பதே அவன் நமக்குக் கற்பிக்கும் அறிவுரையாகும். ஆ! 'தெருக்கூட்டுவோன் செய்கையிலிருந்து நாம் அறியக் கிடக்கும் அரும் பொருளைப் பார்த்தீர்களா?

இரண்டாவதாகப் புறத் தூய்மை இன்றியமையாதது. நம் வீடுகளையும் அவற்றைச் சுற்றியுள்ள இடங்களையும் தூய்மையாக வைத்திருத்தல் வேண்டும். அழுகிய பொருள்கள்—கழித்த பொருள்கள்—ஆறிய உணவுப் பொருள்கள் இவற்றை வெகு தூரத்துக்கு அப்பால் எறிய வேண்டும். நாம் தினந்தோறும் நன்னீரில் நீராடி உடலைத் தூய்மை செய்ய வேண்டும். நீராடிய பின்னர்த் தூய—அழுக்கற்ற உடையையே உடுத்தல் வேண்டும். சுத்தமான பாதை வழியே நடத்தல் வேண்டும். இயன்றவரையில் எல்லாச் சுகாதார முறைகளையும் கடைப்பிடித்தல் வேண்டும். அவற்றைப் பின்பற்றுவோர் நோயடையார்; உடல் உரம் பெறுவர்; முகப் பொலிவு பெறுவர்; இத்தகைய புறத் தூய்மையால் படிப்படியாக அகத் தூய்மையும் பெறுவர்.

நாம் புறத் தூய்மையோடு இருப்பதன்றிப் பிறரையும் புறத் தூய்மையோடு இருக்கப் போதித்தல்

வேண்டும். ஏனெனில், நம் சுற்றுப்புறத்தார் அசுத்தர்களாயிருந்து, நாம் மட்டும் சுத்தமா யிருத்தல் நன்மையைப் பயக்காது. கல்வி யில்லா மக்களுக்கும், சேரிகளில் வாழும் எளிய மக்களுக்கும் தூய வாழ்வினுல் உண்டாகும் கணக்கற்ற நன்மைகளை யெடுத்துக் கூறி, அவர்களை நல்வழிப்படுத்தல் வேண்டும். இஃது ஒரு மகத்தான தொண்டாகும். இத்தொண்டினுல், ஒரு சமூகம் எவ்வளவு நன்மை யடைகிறது என்பதை எண்ணிப் பாருங்கள்!

நோயற்ற வாழ்வு குறைவற்ற செல்வம் அல்லவா?

---

## 13. அருள் நிறைந்த அன்னையார்

1. பிறரிடம் அருள் உடையான் ஆண்டவன் அருளுக்கு இலக்காவன்.

—**இயேசு நாதர்**

2. அருள் உடையார் ஆண்டவனை நெருங்கியவரே ஆவர்.

—**அரிஸ்டாட்டில்**

உயர்வு—தாழ்வு இன்றி, அறியா மக்களிடத்தும் பிற உயிர்களிடத்தும் உண்டாகும் இரக்கமே அருள் எனப்படுவது. இத்தகைய உயரிய குணம் வாய்க்கப் பெற்றோர் வெகு சிலரே யாவர். இக்குணம் உலக மக்களின் உள்ளங்களிற் குடி கொள்ளுமாயின், இவ்வுலகமே பூலோக சுவர்க்கமாக விளங்கும் அன்றோ?

இன்று நம்மை யாளும் ஐந்தாம் ஜார்ஜு மன்னரின் பாட்டியாரான விக்டோரியா மகா ராணியார் மிக்க

அருள் நிறைந்தவர் ; அன்பு கனிந்தவர் ; வறியர்—எளியர்—செல்வர்—கற்ருர்—கல்லார்—யாவரிடத்தும் ஒத்த அன்பும் அருளும் உடையவர் ; சிறுவயது முதற்கொண்டே உயரிய குணங்களை அணிகலன்களாகக் கொண்டவர் ; தாம் சேமித்து வைக்கும் பொருளை ஏழைகட்குக் கொடுத்து மகிழ்ச்சி யடைபவர்.

ஒரு முறை, ஒரு நாடகப் பெண் தன் கணவனை யிழந்து, வறுமையால் வாடுவதை யறிந்த இளவரசியார் விக்டோரியா, தம் அன்னையிடம் நூறு பவுன்களைப் பெற்றுத் தம்மிடம் இருந்த நூறு பவுன்களையும் சேர்த்து, இருநூறு பவுன்களையும் அந்நாடகப் பெண் இருந்த வீடு தேடிச் சென்று கொடுத்து மீண்டார். இங்ஙனம் இளவரசியாராக இருக்கும்போது இவர் செய்த அருள் நிறைந்த செயல்கள் பல.

இவர் பட்டம் அடைந்த பின்னர், ஒரு நாள், அமைச்சரான வெல்லிங்டன் பிரபு ஒரு கடிதத்தைக் கையிலேந்தி இராணியாரிடம் வந்தார். அஃது, ஒரு குற்றவாளிக்கு மரண தண்டனை விதிக்கப்பெற்ற தீர்ப்புக் கடிதமாகும். அமைச்சர் அதிற் கையொப்பம் இடுமாறு இராணியாரை வேண்டினர். அரசியார் அதைப் படித்துக் கண்ணீர் சொரிய அமைச்சரை நோக்கி, “இக்குற்றவாளிக்குச் சாதகமாய்ச் சொல்லத்தக்க தொன்றும் இல்லையோ?” என்று வினவ, கன்னெஞ்சம் படைத்த அமைச்சர், “இல்லை,” என்றனர். அரசியார் மறுபடியும் அவரை நோக்கி, “சிறிது யோசித்துக் கூறும்,” என்றனர். அதன்



விக்டோரியா மகாராணியார்

மீது அமைச்சர், "இவன் குற்றவாளி என்பதில் ஐயம் இல்லை; எவரோ இவனைப் பற்றி நன்மையாக ஒரு முறை கூறியதாக நினைவிருக்கிறது. இவன் ஏதேனும் நன்மை செய்திருக்கலாம்," என்றனர்.

உடனே அன்னையாரின் அகமும் முகமும் மலர்ந்தன; குற்றவாளி செய்துள்ள நற்காரியம் யாதென்றும் வினவாமல், "நல்ல வேளை; நான் பாக்கியசாலியே," எனக் கூறிக்கொண்டே அத்தீர்ப்புக் காகிதத்தில் 'மன்னிக்கப்பட்டான்' என்று எழுதி, அதன் கீழ் 'விக்டோரியா மகா ராணி' எனக் கையொப்பமும் செய்து, மன மகிழ்ச்சியோடு அக்காகிதத்தை அமைச்சர் கையில் கொடுத்தார்.

அன்புள்ள பிள்ளைகளே, உண்மையான அருளுடைமை இச்செய்கை ஒன்றினாலேயே நன்கு விளங்குகின்றதன்றோ? உங்களுக்குப் பெரிய பட்டம், பதவி வந்த காலத்தும் நீங்கள் இத்தகைய உண்மை அருள் வாய்க்கப் பெற்றிருத்தல் வேண்டும்.

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய், பராபரமே!

—பராபரக் கண்ணி—தாயுமானர்

---

## 14. உயிரினும் உயர்ந்தது தாய்நாடே

1. தன் தாய்நாட்டினிடம் அன்பு காட்டாதவன் எதனிடமும் அன்பு காட்டான்.

—பைரன்

2. தாய்நாடே உமது உயிர். தாய்நாடு வாழ்ந்தாற்றான் நீவிரும் வாழ்ந்தவர் ஆவீர்.

—காந்தியடிகள்

3. தாய்நாட்டுக்குத் தொண்டு புரியுங்கள். நமது தாய்நாடு பூலோக சுவர்க்கமாகும்.

—சரோஜினிதேவியார்

ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சோழ மன்னற்கும் சேர வேந்தற்கும் கடும்போர் நிகழ்ந்தது. சேரன் தன்மீது படை யெடுத்து வருகிறான் என்பதை யுணர்ந்த சோழ வேந்தன், "சோழ நாட்டுச் செம்மல்களே, நாட்டினைக் காக்க வாருங்கள்; பகைவனை ஒரு பகற் பொழுதில் விரட்டி யடிப்போம்," என்று இளைஞரைக் கூவி யழைத்தான்.

மன்னன் மாற்றத்தைக் கேட்ட சோணாட்டு முதியாள் ஒருத்தி, தன் ஒரே மைந்தனை நோக்கி, "அப்பனே! நம் தாய்நாட்டின் மீது சேரன் தண்டெடுத்து வந்துள்ளான். அவனை எதிர்த்து விரட்டச் சோணாட்டு இளைஞரைக் கூவி யழைக்கிறான் சோழன். மைந்த! நீ இக்கணமே போருக்குச் செல்; சோழ நாட்டுக்கு நேரும் கதி உனக்கன்றோ? ஆதலின், நமது நாட்டைக் காப்பது நமது கடமையாகும். நீ போரில்

இறக்க நேர்ந்தால், முன்புறம் காயம்பட்டு இற; அதுவே சுத்த வீரனுக்கு அழகாகும். யான் உன்னைப் பெற்றதற்காகப் பெரிதுவப்பேன்," எனக் கூறி, வாளினை அவன் கையிற் கொடுத்தாள்.

வயது முதிர்ந்த தன் தாயின் வீரத்தையும் நாட்டுப் பற்றையும் கண்ட இளைஞன் இளஞ் சிங்கமாக விளங்கினான். அவன் தன் தாயைப் பணிந்து விடை பெற்றுப் போர்க்களம் புகுந்தான்.

முதியாள் மைந்தன் முன் அணியில் முகமலர்ச்சியோடு நின்று போர் புரிந்தான். சோழ மன்னனும் அவன் ஆற்றலைக் கண்டு வியந்தான். இவ்வாறு போர் புரிந்த இளைஞன், அந்தோ! முடிவில் மார்பிற் படுகாயம் பட்டு மாண்டான்.

தன் மைந்தன் முதுகிற் காயம்பட்டு மாண்டான் எனச் சில அற்பர் கூறக் கேட்ட முதியாள் கடுஞ்சினம் கொண்டாள். "ஆ! என் மகன்—வீர மகன்—தாய் நாட்டைக் காக்கச் சென்ற மகன்—முதுகினிற் காயம் பட்டா இறந்தான்? நன்று! நன்று! யான் அமர்க்களம் சென்று காண்பேன் அன்னவன் உடலை. அவர்கள் கூறியது உண்மையாயின், யான் என்னையே சபித்துக் கொள்வேன்," என்று வஞ்சினம் கூறிக் கையில் வாளேந்திக் கூந்தலும் குழையுஞ் சோரப் போர்க்களம் புகுந்தனள்.

முதியாள் ஆங்கிருந்த பிணக் குவியலைப் புரட்டித் தன் மைந்தன் உடலைக் கண்டாள்; அவன்—தன்

வீர மகன்—மார்பினிற் காயமுண்டு மாண்டு கிடைப்பதைக் கண்டாள். அவள் கொண்ட சினம் மறைந்தது; முகம் மலர்ந்தது. "ஆ! என் வீர மைந்தன் மார்பினிற் காயமுண்டு மாண்டான்; இவனைப் பெற்ற யான் பாக்கியசாலியே. உயிரினும் சிறந்தது தாய்நாடே என்னும் எனது முடிவான கொள்கையை என் அருயிர் மைந்தன் கைக்கொண்டு நடந்தது நினைந்து மகிழத் தக்கதே. தாய் நாட்டுக்குத் தொண்டு செய்யவே ஒவ்வொருவரும் கடமைப்பட்டு இருக்கின்றனர்," என்று கூறிக் களித்தாள்.

பிள்ளைகளே, கிழவியின் நாட்டுப் பற்றைக் கவனித்தீர்களா?

---

## 15. நம் நாட்டுப் பெருமக்கள்—1

### இராஜா இராம்மோகன ராய்

இப்படத்தில் இலங்கும்ராம் மோகனராய், தம்பி!
இந்நாட்டிற் பிறந்தவரே; இனியவர்தாம்; தம்பி!
ஒப்பரிய உயர்குணத்தார்; ஒழுக்கமுள்ளார்; தம்பி!
ஓங்கியநன் னூல்களிலே ஒன்று * கண்டார்; தம்பி! 1
அந்தணர்; பல் கலையுடையார்; அறிவுடையார்; தம்பி!
ஆராய்ச்சி பலவுடையார்; அன்புடையார்; தம்பி!
சந்ததமும் நம்மக்கள் சாந்தமுற்று; தம்பி!
நலம்பெறப்பன் னூல்எழுதி நயந்திட்டார்; தம்பி! 2

---

* கடவுள் ஒருவரே என்பது.

தொன்றுதொட்டு வருமொன்றைத் தொலைக்களண்ணின், தம்பீ
துன்பங்களும் எதிர்ப்புகளும் தோன்றிடுமே; தம்பீ !
அன்னை தந்தை சீற்றத்தினுக் காளாகித் தம்பீ!
அண்ணலவர் வீட்டைவிட்டே அகன்றிட்டார் தம்பீ! 3

பற்பலபேர் எதிர்த்தார்கள்; பயமின்றித் தம்பீ!
'பகர்தெய்வம் ஒன்றெ'ன்றே, பகர்ந்திட்டார்; தம்பீ !
'நற்குலமும் ஒன்றெ'ன்றே நயந்திட்டார்; தம்பீ !
நல்லறிஞர் அவர்கொள்கை நன்றென்றார்; தம்பீ ! 4

கணவன்இறந் தால்மனைவி கட்டையேறல் தம்பீ !
கொடியவொரு வழக்கமென்றே கூறிவந்தார்; தம்பீ !
அன்னதனை அடியோடிங் ககற்றிவிட்டார்; தம்பீ !
அரியபிரம சமாஜத்தை ஆரம்பித்தார்; தம்பீ! 5

பெண்கள்நலம் பேணுதற்கே பேரிதுழைத்தார்; தம்பீ !
பெண்கல்விக் காகவொரு பள்ளிவைத்தார்; தம்பீ !
எண்ணரிய நன்மைகள்செய் தேற்றமுற்றார்; தம்பீ !
எழிலுடையார் போலநீயும் இலங்குவையோ ? தம்பீ ! 6

—மா. இராசமாணிக்கம்

———

## 16. இராமகிருஷ்ணரும் சமரசமும்

1. ஒன்றே குலம்—ஒருவனே தேவன்.

—திருமூலர்

2. எல்லா மதங்களிலும் ஒளிர்பவன் ஒருவனே.

—இரவீந்திர நாத தாகூர்

உலகில் சமரசத்தையும் சன்மார்க்கத்தையும் அறிவுறுத்தி மறைந்த பெரியாருள் இராமகிருஷ்ண பரமஹம்சர் ஒருவராவர். அவர் 1833-ஆம் ஆண்டு கல்கத்தாவில் அந்தணர் வகுப்பிற் பிறந்தார். பள்ளிக் கல்விப் பயிற்சியைப் பெருவிடினும், அவர் உண்மை அறிஞராய் விளங்கினர்.

இராமகிருஷ்ணர் பொது நோக்குடையவர்; ஒவ்வொரு மதத்திலும் உண்மையுண்டு என்பவர்; அவருக்கு எம்மதமும் சம்மதமே. உலகில் உள்ள எல்லா மதங்களின் சத்து எதுவோ, அதுவே அவரது உண்மை மதமாகும். யாவரும் ஒருங்கே ஒப்புக் கொள்ளும் உண்மைக் கொள்கைகள் எவையோ, அவையே அவர் மதக் கோட்பாடுகள் ஆகும்.

அவர் 'எல்லாம் கடவுள் மயம்' என்னும் உயரிய உணர்ச்சி உடையவர். ஆதலின், அவரிடம் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற வேற்றுமை இல்லை; உலகில் உள்ள ஒவ்வொரு பொருளிலும் அவர் ஆண்டவனைக் கண்டு களித்தார்; 'இயற்கையின் ஒப்பற்ற அழகே இறைவனது திருத்தோற்றம் ஆகும்,' என்னும் உண்மையை உணர்ந்திருந்தார். அன்பும், அகத்

தூய்மையும், தன்னலம் இன்மையும், நல்லொழுக்கமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற இராமகிருஷ்ணரின் அரிய பிரார்த்தனை கீழ் வருமாறு காணப்பட்டது :

"அன்னையே, நான் உயர்ந்தவன் என்றும், பிராமணன் என்றும்—அவர்கள் தாழ்ந்தவர்கள் என்றும் பறையர்கள் என்றும் உள்ள கேவல எண்ணத்தை என் அகத்தினின்றும் அடியோடு அகற்றிவிடு. அவர்களும்—நானும்—நீயும் ஒன்றே அன்றோ?"

ஆ! என்ன அழகிய பிரார்த்தனை! உண்மைப் பொருள் ததும்பும் பிரார்த்தனை! யாவரும் ஒன்றென்றே அறிவுறுத்தும் பிரார்த்தனை!

"பிற மதங்களை நாம் வெறுத்தல் கூடாது. அவையும் கடவுளைக் காட்டுவனவே. ஆதலின், மக்களே, நீவிர், வீண் வாதங்கள் புரிய வேண்டா; 'என் மதம், உன் மதம்' என்று மதம் பிடித்து அலைய வேண்டா; நீவிர் சமரச ஞானம் பெற்று, 'குலம் ஒன்று—தெய்வம் ஒன்று' என்னும் உண்மை உணர்வைப் பெற்று, உத்தமராக ஒளிர்வீராக," என்பதுவே இராமகிருஷ்ணரின் அரிய உபதேசம் ஆகும்.

சிறந்த அறிஞரான இராமகிருஷ்ணர் தழுவிய சமரச மதமே இன்று நம் பெரியாரான காந்தியடிகளும் தழுவி நிற்பது. இந்தியா—நமது தாய் நாடு இன்று வேண்டி நிற்பதுவும் அதுதான். ஆகலின், அன்புள்ள பிள்ளைகளே, நீங்கள் சமரச மத

உணர்ச்சியைப் பெற்று உண்மையான நாட்டு மக்களாக விளங்குதல் வேண்டும்.

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ அன்றோ? பராபரமே! 1

—பராபரக் கண்ணி—தாயுமானுர்

சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற வுலகீர்!
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல்அழ கலவே;
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே ஞான
நிருத்தமிடும் தனித்தலைவர் ஒருத்தாவர் தாமே;
வீதியிலே அருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே. 2

—அருட்பா—இராமலிங்க அடிகள்

---

# 17. நம் நாட்டுப் பெருமக்கள்—II



இரவீந்திர நாத தாகூர்

இங்கிருப்போர் இரவீந்திர நாததாகூர் ; தம்பீ !
    இந்நாட்டார் ; வங்காளக் கவியரசர் ; தம்பீ !
எங்கும்புகழ் பெற்றவரே; எழிலுடையார் ; தம்பீ !
    எப்போதும் இறைவர்தமை ஏற்றிடுவார் ; தம்பீ ! 1

சமரசத்தார் ; சன்மார்க்கர் ; சாந்தமூர்த்தி ; தம்பீ !
    சகம்புகழச் சாந்திநிகே தம் அமைத்தார் ; தம்பீ !
சாந்தநிலை யுற்றவங்கே சமரசத்தைத் தம்பீ !
    சன்மார்க்கத் துடனூட்டும் சமர்த்தர்இவர் ; தம்பீ ! 2

உயர்வென்றும் தாழ்வென்றும் உன்னுதார் ; தம்பீ ! [தம்பீ !
    'ஒழுக்கமுள்ளோர் உயர்ந்தவர்'என் றுரைத்திடுவார்

நயமுடைய பாக்கள்பல நயந்துரைப்பார்; தம்பீ !
நாற்றிசையும் புகழ்மணக்க நன்றுரைப்பார்; தம்பீ ! 3
உலகில்உயர்* பரிசுப்பெற்றே உயர்வடைந்தார்; தம்பீ !
உயர்குணத்தார்; ஒழுக்கமுள்ளார்; உண்மையன்பர்; தம்பீ!
பலநாட்டார் புகழ்ந்தளித்த பரிசுடையார்; தம்பீ !
**பண்புடையார் போலநீயும் போலிதுவையோ ? தம்பீ!**

—மா. இராசமாணிக்கம்

---

## 18. நோன்பும் அதன் பயனும்

1. நோன்பினுல் நோயை விரட்டலாம்.

—காந்தியடிகள்

2. நோன்பு இருத்தலால் ஜீரணக் கருவிகள் போதிய ஓய்வைப் பெற்று நல்ல நிலையை யடையும்; இரத்தவோட்டம் பலப்படும்.

—டாக்டர். முத்து

பண்டைக் காலந்தொட்டே மக்கள் நோன்பினைக் கையாண்டு வருகின்றனர். நமது தாய்நாட்டில் நோன்பு மிகுதியும் கையாளப்பட்டு வருகிறது குறிப்பிடத்தக்கது. நோன்பிருத்தலைப் பற்றிப் பல சமயங்களும் அறிவுறுத்துகின்றன. நோன்பிருத்தலால் நன்மை யாது? நமது உடல் நன்மை பெறவே; குடல் நன்னிலையை யடையவே; உதிரம் சரியாக ஓடவே என்க.

நமது உடலில் நடைபெறும்பல வேலைகள் என்ன வென்று நமக்குத் தெரிவதில்லை. உணவு சீரணமா-

---

* 8000 பவுன் பெறுமான நோபில் பரிசு.

கும்போது அஃது எம்மாறுதல்களை யடைகின்றதென்பதை நாம் சரிவர உணர்வதில்லை. பலர் புத்தகங்களில் படித்தறிந்தும், அதைப் பற்றிக் கவலை கொள்வதில்லை ; செம்மையாய் நடப்பது மில்லை. உடலில் உள்ள உறுப்புகள் நாள்தோறும் தம் வேலைகளை எங்ஙனம் செய்து முடிக்கின்றன என்பதை நாம் அறிதல் வேண்டும்.

உரிய காலங்களில் மல, நீர்களைக் கழியாவிடின், குடலில் துன்பம் உண்டாகிறது. அன்று முதல் உணவருந்துவது இன்பத்தைத் தராது. இந்நிலையைப் போக்க நோன்பிருத்தல் அவசியம். உடனே குடலில் உண்டாகும் துன்பம் ஒழிந்து, குடல் முன்போல ஒழுங்காக வேலை செய்யும். குடல் நோய் உண்டாவதற்கு முன்னரே, சரியாக நோன்பு முறையைக் கைக்கொண்டுவரின், குடல் நன்னிலையை யடையும் ; இரத்த ஓட்டமும் அதிகப்படும்.

குடலில் அழுக்குத் தங்கி யிருத்தல், உண்ண ஆசையற்றிருத்தல், எப்பங்கள் உண்டாதல், உடல் சோர்வுற்று இருத்தல், முகத் தோற்றம் மாறுபடுதல்— இக்காலங்களில் நோன்பிருத்தல் வேண்டும். நோன்பினுல் இத்துன்பங்கள் ஒழிந்து இன்பத்தைக் காணலாம். குடல் தன் வேலையைச் சரியாகச் செய்யவே நோன்பிருத்தல் என்பதை மனத்தில் இருத்தல் வேண்டும்.

வாரத்துக்கு ஒரு முறையோ, பதினைந்து நாட்களுக்கு ஒரு முறையோ, மாதத்துக்கு ஒரு முறையோ

நோன்பிருத்தல் இன்றியமையாதது. அன்று தண்ணீரைத் தவிர வேறு எத்தகைய உணவையும் உட்கொள்ளலாகாது. இங்ஙனம் அடிக்கடி நோன்பு இருந்தால், சீரணக் கருவிகள் ஓய்வைப் பெற்று மகிழ்ந்து, மீண்டும் தம் வேலைகளைச் செவ்வையாகச் செய்துவரும். இதுவே நோன்பிருத்தலின் இரகசியம் ஆகும்.

நோன்பிருந்த மறுநாள் மிதமிஞ்சி உண்ணலாகாது; அது மிக்க கேடு பயக்கும். மிதமான உணவை ஒழுங்காக உட்கொள்ளல் வேண்டும். இம்முறையை, அன்புள்ள பிள்ளைகளே, நீவிர் பின்பற்றி வருவீராயின், நோயற்று, உடல் உரம் பெற்று, என்றும் குன்றா இளமை பெற்று, பொலிவுற்று வாழ்வீர்கள்.

---

## 19. நானும் உங்களில் ஒருவன்

1. காப்பவன் அரசனே யன்றி, ஆள்பவன் அரசன் ஆகான்.

—கம்பர்

2. அரசன் பொது மக்களுக்கு ஊழியனே யாவன்.
மக்களின் இன்ப துன்பங்களே அரசனுக்கும் உரியவை.

—இரவீந்திரநாத தாகூர்

நாட்டு மக்களைப் பாதுகாக்கும் மனிதனே—தனது தூய வாழ்வினால் மக்களுக்குப் பல நலங்களை அறிவுறுத்தும் மாண்புடையவனே—அரசன் எனப்படுவான். அன்பு வழி காட்ட, அறம் துணை செல்லக் குடிகளுக்குத் தொண்டு செய்து வாழ்வதே வேந்தனது அறநெறியாகும். எப்பொருளையும் ஆராயும்

அறிவும், அறச் செயலும், பெருந்தன்மையும், வீரமும் இவை போன்ற பிற உயரிய குணங்களும், நீதி தவறா நடு நிலையும் பெற்றிருக்கும் மன்னன் தன் பெயரையும் புகழையும் உலகம் உள்ளளவும் நிலை நிறுத்தி மறைகின்றான். இத்தகைய உயரிய கொள்கைகளும் குணங்களும் நம் நற்றாயாரான விக்டோரியா மகா ராணியாரிடம் பொருந்தி யிருந்தன வென்பதை முன்னொரு பாடத்திற் காணலாம்.

பிரிட்டிஷ் தீவுகளில் ஒன்றான அயர்லாந்தின் தலைவராக விளங்கும் திவேலரா மேற் கூறப்பெற்ற உயரிய குணங்களும் கொள்கைகளும் உடையவர். உயர்ந்த மெல்லிய உடலையும், மடிந்த கன்னங்களையும், குழி விழுந்த கண்களையும் கொண்ட இப்பெரியார் அருங்குணங்களே அவதாரமாகத் தோன்றியவர் என்னல் மிகையாகாது. எத்துன்பம் நேரினும், இவர் உண்மையினின்றும் பிறழார்; மறைமுகமாகச் செய்யும் எத்தகைய வேலைகளையும் விரும்பார்; தம் நாடு, தம் மக்கள் என்றும் நலம் பெற்று இன்பம் நுகர வேண்டும் என்னும் பேரவாவே இப்பெரியாரின் சமயமாகும். நாட்டு முன்னேற்றத்துக்குரிய துறைகளே இவர் சமயக் கோட்பாடுகள் ஆகும். தன் நாடு மிக உன்னத நிலையில் இருக்கக் காண்பதே இவரது வேட்கை யாகும்.

இவர் முதன் முதலில் ஒரு கலாசாலையில் கணிதப் போதகாசிரியராக இருந்தவர். நாட்டுப் பற்று இளமை தொட்டே இவரது உள்ளத்தில் ஊற, அதன் பயனாக,

இவர் தம் வேலையை விட்டு அரசியல் காரியங்களில் தொண்டு செய்யலானார். அன்று முதல் இவர் அடைந்த தோல்விகளும் துன்பங்களும் பல. எனினும், உயர் குணங்களையுடைய இப்பெரியார், தமக்கு நேர்ந்த தோல்விகளால் மனந் தளராமல், அயர்லாந்து மக்களின் நலத்துக்கே உழைக்கத் தம் உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணஞ் செய்தனர். குடிகளும் இவரது அரிய சேவையைப் பாராட்டி, "இவரே நம் நாட்டுத் தலைவராக இருக்கத் தக்கவர்; நம்மை நன்னிலைக்குக் கொண்டுவரும் இரட்சகர் இவரே," என்ற முடிவுகொண்டு இவரைத் தம் தலைவர் ஆக்கினர். ஆ! உயர்ந்த குணங்களாலும், உழைப்பினாலும், தூய வாழ்வினாலும் ஒருவர் அடையும் பெருமை என்னே! இதுவன்றோ இன்ப நிலை!!

திவேலரா அரசியல் உலகில் மாசற்ற ஒழுக்கம் உடையவர். அவர்தம் உயரிய கொள்கைகளை எடுத்துக் கூறுகையில் அவர் விழிகளில் தீப்பொறி பறக்கும். அவர் பேசும் கூட்டத்தில் ஊசி விழுந்தாலும் அதன் ஓசை கேட்கும்படி அமைதி நிலவி யிருக்கும். "நானும் உங்களில் ஒருவன். உங்கள் இன்ப துன்பங்கள் என்னுடையனவே," என்று இவர் உருக்கமாகக் கூறும் போது ஆண்களும் பெண்களும் வாயைத் திறந்த வண்ணம் அன்புருகத் தம் இரட்சகரை நோக்கியவாறு இருப்பர்.

இவர் தியாக சிந்தையையும் உயர்ந்த குணங்களையும் பகிர்ந்து கொண்டவர் போல விளங்குபவர்

இவர் ஆருயிர் மனைவியார். அயர்லாந்தின் சுதந்தர வீரரின் மனைவியாரான இவர் தம் ஏழு குழந்தைகளையும் கவனித்துக்கொண்டு, மிக எளிய குடும்ப வாழ்க்கையை ஆடம்பரமற்று நடத்தி வருவது போன்னேபோலப் போற்றத் தக்கது.

ஒவ்வோர் அயர்லாந்துவாசியும் தன் வீட்டில் தன் இரட்சகரான திவேலராவின் படத்தை வைத்துப் பூசித்து வருகின்ருன் எனின், இத்தலைவரது மாண்பினை என்னென்று புகழ்வேம்!

---

## 20. சென்னைச் சேவாசாதனம்

1. சேவா சாதனத்தால் பெண்கள் வாழ்க்கை பெருமை யடைகின்றது.

—காந்தியடிகள்

2. நூற் கல்வியோடு, பின்னல், தையல், நெசவு, சமைத்தல், குடும்பப் பாதுகாப்பு முதலியவற்றைக் கற்பதால், பெண்கள் உலகம் நலம் பெறும். இவற்றைப் போதிக்கும் சேவா சாதனங்கள் போற்றற் குரியன.

—சர். விஸ்வேஸ்வரையா

உலகம் ஆண் பெண் என்னும் இரு பகுதிகளால் ஆக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டும் சேர்ந்த ஒன்றே உலகம் எனப்படும். இவை ஒன்றுபட்டாலன்றி, உலகம் நன்முறையில் நடைபெறாது. பெண் தாய் என்னும் நிலையில் இருப்பதால், பெண்ணலன் பெரிதும்

காப்பாற்றப்படல் வேண்டும். ஒரு நாட்டு நலன் அந் நாட்டுப் பெண்மக்கள் நிலையைப் பொறுத்தே நிற்பது. பெண் பெருமை பெற்றால், நாடும் பெருமை பெறும்.

பெண்ணுலகம் முன்னேற வேண்டுமாயின், பெண்கல்வி அவசியமானது. பள்ளிக் கல்வியோடு குடும்பக் கல்வியும் வேண்டற்பாலது. குடும்பக் கல்வி-யாவது, வீட்டையும், பொருள்களையும், குழந்தைக-ளையும் தன்னையும் சுத்தமாக வைத்துக்கொள்ளல்—பின்-னல், தையல், நெசவு முதலிய கைத்தொழில்களைக் கற்றல் முதலியனவாம். பள்ளிக் கல்வியால் உலக அறிவும், நாட்டு நிலையும், நாட்டு முன்னேற்றத்துக்-குரிய நிலையும் பிறவும் அறியலாம். எனவே, பள்ளிக் கல்வியும் குடும்பக் கல்வியுமே பெண்களுக்குற்ற கல்வி எனப்படும். இவ்விரண்டைப் போதிக்கும் நிலையங்கள் ஒரு சில நம் தாய்நாட்டில் இப்போது ஏற்பட்டுள்ளன. இவற்றிற்குச் சேவா சாதனங்கள் எனப் பெயர். இவற்றுள் சென்னைச் சேவாசாதனம் ஒன்றாகும்.

இஃது, இந்திய மாதர் சங்கத்தின் ஆதரவில், நடைபெற்று வருகின்றது. பல பெருமக்களின் பொருள் உதவியாலும், மாதர் சங்கத்தார் அன்பு நிறைந்த மேற்பார்வையாலும் ஆரம்பத்தில் மிகச் சிறிய-தாக இருந்த இச்சாதனம் இப்போது சென்னை மாகாணத்திலேயே பெருஞ் சிறப்பும் பெற்றுள்ளது; மிகப் பெரிய கட்டடத்தையும், மாணவிகள் வசிக்கச்

சிறு குடில்களையும் பெற்று அழகிய சிங்காரத் தோட்-டத்தின் நடுவில் அமைந்துள்ளது.

லேஸ் பின்னுதல், பின்னல் வேலை, தையல் வேலை, வெட்டுதல், நெசவு வேலை, ஜிகினா வைத்துத் தைத்தல், பிரம்பைக் கொண்டு பின்னுதல் முதலிய பல கைத் தொழில்கள் இங்குள்ள மாணவிகட்குக் கற்பிக்கப்-படுகின்றன. இவ் வேலைகளில் மன மற்றவர்க்கு உபாத்தியாயினி வேலையும் வைத்தியப் பயிற்சியும் போதிக்கப்படுகின்றன.

இச்சேவா சாதனத்தில் தயாரிக்கப்படும் பொருள்-கள் உடனுக்குடனே விலையாய்விடுதல் குறிப்பிடத் தக்கது. இதில் உள்ள ஒவ்வொரு பெண்ணும் ஒவ்-வொரு நிமிடமும் சுறுசுறுப்புடன் தன் வேலையைச் செய்தல் கண்டு மகிழத் தக்கது. சாதன விடுதியை ஒவ்வொரு நாள் ஒவ்வொரு மாணவி மேற்பார்க்க வேண்டும். மாணவிகள் தங்கள் பிற்கால வாழ்வில் தங்கள் வீடுகளையும் பொருள்களையும் வைத்துக்கொள்-ளும் முறை, சாதன விடுதியையும் பொருள்களையும் வைத்துக்கொள்ளும் முறையைக் கொண்டு நேர் முகமாகக் கற்பிக்கப்படுகிறது.

சென்னைச் சேவாசாதனம் பணக்காரப் பெண்க-ளுக்கு மட்டும் அன்று. அஃது ஏழைப் பெண்களுக்-கும், விதவைகட்கும், அநாதைக் குழந்தைகட்கும் அப-யமளிக்கும் மனோகர ஸ்தாபனமாகும். இவர்களுக்-குப் போதிய கல்வி, கைத்தொழில் ஊட்டுவதோடு நில்லாமல், இவர்கள் பிற்கால வாழ்க்கை சுகமே நடக்க

வேலே பார்த்துத் தருவதும் சேவா சாதனத்தின் சிறந்த கடமையாக இருப்பது போற்றற்குரியது.

பெண்கள் தாமாகச் சுதந்தரத்தோடு வாழவும், நிறைந்த அறிவைப் பெறவும் சிறந்த தொண்டாற்றி வரும் இச்சென்னைச் சேவாசாதனம் வரவர மிக்க உன்னத நிலையைப் பெற்று வருவது தமிழ் நாட்டுக்கே பெருமையன்றோ? இதனைப் பெருமக்கள் ஆதரித்து, இது போன்ற சாதனங்களை ஒவ்வொரு ஜில்லாவிலும் தாபித்துப் பெண்கள் நலத்துக்குப் பாடுபட்டால், அவர்கள் பெருந்துணை புரிந்த வள்ளல்களாவார்கள். நம் தாய் நாட்டுச் சகோதரிகள் நலம் பெற்றால், சகோதரரும் நலம் பெறுவர்; இனி நம் நாட்டு வீர மக்களாக விளங்கும் எதிர்காலப் பிள்ளைகளும் அறிவு ஒழுக்கங்களில் சிறப்புற வழியுண்டாகும். சுருங்கக் கூறின், இத்தகைய சேவா சாதனங்களால் நம் தாய் நாடு விரைவில் முன்னேற்றம் அடையும்.

ஊக்கமுடன் விவசாயம் உயர்த்திடுதல் வேண்டும்;
  உழைத்துழைத்தே கைந்தொழிலை உயர்த்திடுதல் வேண்டும்;
ஏக்கமுறும் வறுமைதனை எற்றிடுதல் வேண்டும்;
  எல்லோரும் கைந்தொழிலில் ஏற்றமுறல் வேண்டும்;
தாக்கியழி நோய்கள்தமைத் தகர்த்துவிடல் வேண்டும்;
  தரணிபுகழ் அமெரிக்கர்தம் உழைப்புநெறி வேண்டும்;
நாக்களவில் பெண்கல்வி நவிலாமை வேண்டும்;
  நடைமுறையில் இன்னவற்றை நடத்திவரல் வேண்டும்.

—மா. இராசமாணிக்கம்

---

## 21. சொல்தவருச் செம்மல்

1. சொன்ன சொல்லைக் காப்பாற்றுபவனே மனிதர்களிற் சிறந்தவன்.

—ஜேம்ஸ் ஆலன்

2. நீ எந்நிலையில் இருப்பினும் சரியே; சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதை உன் கடமையாகக்கொள்; நீ, உயர்வடைவாய்.

—தாமஸ் கார்லைல்

ஏறக்குறைய ஐரோப்பா முழுவதையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தி மன்னர் மன்னனுகக் குன்றுப் புகழுடன் விளங்கிய பிரஞ்சு வீரன் நெப்போலியன் சொல்தவருச் செம்மல் எனப் பல்லோராலும் புகழப்படுபவன். அவன் பள்ளியிற் படிக்கும் இளைஞனுயிருந்தபோது பழங்களை விற்கும் கிழவி ஒருத்தியிடம் நட்புக்கொண்டான். அவ்விளைஞன் சில வேளைகளில் பணம் தந்து பழங்களை வாங்கிக்கொள்வான்; பணம் இல்லாச் சமயங்களில் கடனுக வாங்குவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தான். அவன் வாங்கிய கடனைத் திருப்பிக்கொடுக்கும் உண்மையன் என்பதை யறிந்துகொண்ட கிழவி, அவன் வேண்டும்போ தெல்லாம் கடனுகப் பழங்களைக் கொடுத்தாள்.

பின்னர், நெப்போலியன் தான் வாசித்துக் கொண்டிருந்த பள்ளியையும் ஊரையும் விட்டுச் செல்ல நேர்ந்தது. அப்போது அவன் கையில் பணம் இல்லை. அவன் கிழவியை அழைத்து, "பாட்டீ, யான் திட-

ரென வேற்றூர்க்குச் செல்ல நேர்ந்திருப்பதால், உன் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. எனினும், விரைவில் உன் கடன் தீர்க்கப்படும்," என்றான். கிழவி மகிழ்வுடன் அவனுக்கு விடை தந்தாள்.

பல ஆண்டுகள் சென்றன. நெப்போலியன் தான் படித்துக்கொண்டிருந்த நகரத்துக்கு வந்தான். எந்நிலையில்? நெப்போலியன்—பிரஞ்சு நாட்டுச் சக்கரவர்த்தி என்னும் ஒப்புயர்வில்லாப் பதவியோடு வந்தான். அந்நிலையிலும் அவ்வுத்தமன் கிழவியை மறந்துவிடவில்லை. அவன் ஒரு நாள் மாறுவேடம் அணிந்து, தன் மெய்க்காப்பாளனோடு கிழவியின் சிறு குடிலையடைந்தான். அவளிடமிருந்து பழம் ஒன்றை வாங்கித் தின்றுகொண்டே, "பாட்டீ, நம் சக்கரவர்த்தி இந்நகருக்கு வந்திருப்பதாகக் கேள்வியுற்றனையா? அவரை நீ அறிவையோ?" என்றான். கிழவி "ஆம், நான் அவரை நன்கறிவேன். அவர் இங்குப் பள்ளிச் சிறுவராக இருக்கையில் என்னிடம் பழங்கள் வாங்குவது வழக்கம்," என்றாள்.

இரண்டொரு நிமிடங்கள் கழிந்தன. பின்னர் நெப்போலியன், "பாட்டீ, அவர் அவ்வப்போது உனக்குப் பணம் தவறாமல் கொடுத்தனரா?" என்று கேட்டான். "ஆம்," என்று கிழவி உடனே விடையளித்தாள். "இல்லை, இல்லை, நீ மறந்து கூறுகின்றனை. அவர் இந்நிலையிலும் உனக்குப் பணம் தரவேண்டியவராக இருக்கிறார்," என்றான் நெப்போலியன்.

உடனே கிழவி நெப்போலியனை வியப்பால் உற்று நோக்கினுள். நகைத்துக்கொண்டே நெப்போலியன், "பாட்டீ, நீ அவரைச் சரியாய் அறிந்து கொள்ளவில்லையோ? நான் தான் அச்சக்கரவர்த்தி," என்று கூறினுன்.

கிழவி அவனை நன்ருகக் கூர்ந்து நோக்கினுள்; "ஆம், ஆம்; நீரே அவர்" என்று கூறி, நெப்போலியன் பாதங்களில் வீழ்ந்து பணிந்தாள். பணிந்த கிழவியைப் பரிவுடன் தூக்கிய வேந்தர் பெருமான், "நான் வாங்கிய பழைய கடன் இப்போது உனக்குத் தரப்படும்," என்று கூறி, அவளுக்குத் திரண்ட செல்வத்தைத் தந்தான்; அவள் உறைந்த சிறு குடிலை மாளிகை யாக்கினுன்; அவள் குடும்பத்தை மிக வுயர்ந்த நிலைக்குக் கொணர்ந்தான்.

பிள்ளைகளே, நெப்போலியனின் சொன்ன சொல்லை நிறைவேற்றும் திறமையையும், ஞாபகச் சக்தியையும், அன்பு கனிந்த அறச் செயலையும் என்னென்று கூறி வியப்பது!

---

## 22. தேடு, உனக்குக் கிடைக்கும்.

1. கேட்பவன் கொடுக்கப்படுவான்.

—இயேசு நாதர்

2. தன்னம்பிக்கையோடு முயற்சி செய். வெற்றி உனதேயாகும்.

—ஜேம்ஸ் ஆலன்

'தேடு, உனக்குக் கிடைக்கும்' என்பது மறை மொழி. நமது வாழ்க்கையின் வெற்றி இதில் அடங்கியுள்ளது. தேடினாற்றான் எப்பொருளும் நமக்குக் கிடைக்கிறது என்னும் உண்மையை நமது அநுபவ வாயிலாக அறிந்திருக்கின்றோம் அல்லவா? இங்ஙனமே, தன்னம்பிக்கையோடு நமது வாழ்க்கையைச் சீர்படுத்தி முன்னேறச் செந்நெறியில் முயல வேண்டும். முயன்றால் முடியாதது ஒன்றுண்டோ ?

எதற்கும் சிரத்தை முதலில் வேண்டற்பாலது. நீர் உம்மிடம் நம்பிக்கையுடையரா யிருத்தல் வேண்டும். தன்னம்பிக்கையின்றேல், எக்காரியத்திலும் சித்திபெற இயலாது. இன்று உலகத்திற் சிறந்த அறிஞர்களுள் ஒருவரான பிரிட்டிஷ் பிரதம மந்திரியார் இராம்சே மாக்டோனல்டு ஒரு சாதாரணக் குடும்பத்திற் பிறந்தவர்; குதிரை லாயத்தில் வேலை பார்த்தவர் ; மீன் பிடித்தும் விற்று வந்தவர். அவர் இப்போது எந்நிலையில் இருக்கின்றார்? உலகிற் சிறந்த மிகப் பெரிய வல்லரசின் பிரதம மந்திரியாராக இருக்கின்றார். காரணம் என் ? தன்னம்-

பிக்கையும் சலியா வுழைப்புமே அவரை இந்நிலைக்குக் கொண்டுவந்தவை. 'தேடு, உனக்குக் கிடைக்கும்' என்னும் செம்மொழிக்குச் சிறந்த உதாரணமாக விளங்குபவர் இவரல்லரோ?



ஆபிரகாம் லிங்கன்

மிகச் சிறியதோர் குடிசையில்—உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லாத ஏழைக் குடும்பத்தில்—பிறந்தவர் ஆபிரகாம் லிங்கன் என்பவர். இவர் மிகக் குறைந்த கல்வி கற்றுத் தந்தையோடு விறகு வெட்டிப் பிழைத்து வந்தார்; பின்னர்க் காடுகளைத் திருத்தி, விவசாயஞ் செய்து, தமது குடும்பத்தைக் காப்பாற்றிக்கொண்டே

கல்வி கற்றார். இவர் செய்யாத இழிதொழிலே இல்லை என்னலாம். இவர் கசாப்புக்கடையும் வைத்திருந்தார். ஆயினும், இவர் 'தேடு, உனக்குக் கிடைக்கும்' என்னும் நல்லுரையைச் சிரமேற்றாங்கித் தன்னம்பிக்கையோடு உழைக்கலானார்; சிறிது கல்வி கற்றதும், ஜன சமூகத் தொண்டு புரியத் தொடங்கிச் சட்ட ஞானம் பெற்று வக்கிலானார். பின்னர், ஏழைகள் சார்பில் உழைத்துச் சட்டசபையில் அங்கத்தினரானார்; மதுபானம், அடிமைத்தனம் முதலிய கொடுமைகளையொழிக்கத் தீவிரப் பிரசாரம் செய்து என்றும் குன்றாப் புகழுடைந்தார். முடிவில் ஆபிரகாம் லிங்கன் அமெரிக்காவின் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அமெரிக்காவில் உள்ள நீக்ரோவர்களுக்குச் சமூக வாழ்வில் சுதந்தர மளித்த சுந்தரர் இவரே. ஆ! இவரது தூய பெயர் உலகம் உள்ளளவும் நிலைபெற்றிருக்குமன்றோ!

ஆதலின், அருமைப் பிள்ளைகளே, 'தேடு, உனக்குக் கிடைக்கும்' என்னும் செம்மொழிப்படி உழைத்த பெருமக்களின் வரலாறுகளைப் படியுங்கள்; அவர்களின் அறிவுரைகளில் நம்பிக்கை கொள்ளுங்கள்; உங்கள் மனத்தில் ஊறிக் கிடக்கும் பலவீனத்தை வேரோடு களைந்து எறியுங்கள்; 'நாம் ஒன்றுக்கும் உதவோம்,' என்ற கேவல நினைவை அகற்றி, 'நாம் ஆற்றல் உடையோம், எக்காரியத்திலும் வெற்றி பெறுவோம்,' என்னும் சிறந்த எண்ணத்தையும் நம்பிக்கையையும் வளர்த்து வாருங்கள்; 'நாம் அரிய செயலைச் செய்து

முடிக்கவே பிறந்துள்ளோம்' என்பதை மறக்க வேண்டா; 'காலம் சரியில்லை; யோகமில்லை' என்ற சோம்பேறித்தனமுள்ள வார்த்தைகள் உங்கள் வாயினின்று வரவிடாதீர்கள். முழு ஊக்கத்துடனும் தன்னம்பிக்கையோடும் உழைப்பின், வெற்றி உங்களுடையதே.

---

## 23. சீவகாருண்யம்

1. மனிதர்களிடம் காட்டும் இரக்கத்தையே பிராணிகளிடத்தும் செலுத்த வேண்டும். அதுவே சீவகாருண்யம் எனப்படும்.

—புத்த மகான்

2. பிராணிகளிடம் இரக்கம் காட்டுதலே உண்மை மனிதனின் ஒழுக்கமாகும்.

—டார்வின்

கொடிய விலங்குகளாயினும் அவை நம்மை வீணுக் துன்புறுத்துவதில்லை. அன்புக்கு அவை கட்டுப் படுகின்றன. கிராமங்களில் உள்ள வீடுகளில் நல்ல பாம்புகள் பகலில் நடமாடுவதையும், அவற்றைக் கிராமவாசிகள் தெய்வமாகக் கொண்டாடுவதையும் இன்றுங் காணலாம். கானுறையும் அரிமா ஆண்ட்ரகிள்ஸ் என்னும் அடிமையினிடம் எவ்வளவு அன்பா யிருந்ததென்பதை எண்ணிப் பாருங்கள்! ஆகவே, அன்பு வழி

காட்ட, விலங்குகள் கொடுமை நீங்கி நல்வழிப்படு-கின்றன.

நமக்குத் தொண்டு செய்யும் குதிரை, மாடு, கழுதை, பசு முதலிய விலங்கினங்கள் அன்பே உரு-வானவை. அவற்றின் குணவிசயங்களைக் கவனிக்கும் ஒருவன், அவற்றைத் தழுவாமல் விடான். ஆ! கழுதை எவ்வளவு சுமையைத் தாங்கிக்கொண்டு பொறுமையோடு வழி நடக்கிறதென்பதை எண்ணிப் பாருங்கள்! குதிரை வண்டியை இழுத்துக்கொண்டு எத்தனை மைல் தூரம் ஓடுகின்றதென்பதை நினைத்-துப் பாருங்கள்! மாடுகள் நம்மோடு ஒத்துழையா-விடின், நமது உழவு சிறப்புறுமோ? வயல்களின் கதி யாதாயிருக்கும்? இயந்திரங்கள் அற்ற ஏழை இந்தியாவில், இயந்திரங்களைப் போல வயல்களில் உழைக்கும் மாடுகளின் மாண்பே மாண்பு! இந்தியர் உயிர் பெற்றிருக்க, இவ்வுழுதொழில் நடத்தும் மாடுக-ளல்லவா காரணமாகின்றன? அரிய தொண்டு செய்யும் இவற்றுக்கு நாம் தொண்டு செய்தலன்றோ சிறந்தது!

பசு நமக்குப் புரியும் நன்மைகள் பல; தனது அரிய—தூய வெண்மையான பாலினால் நம்மை வளர்க்-கின்றது; தன்னிடமிருந்து கழியும் பிறவற்றால் நம் இல்லங்களைத் தூய்மையாக்குகின்றது. ஆதலின், இந்-துக்கள் அதைத் தெய்வீகப் பிறப்பென எண்ணுகின்-றனர். உண்மையில் அது மனிதர்க்கு—காப்பி, கோக்-

கோ, டீ, ஓவல்டைன் முதலிய பானங்கள் மிக்குள்ள இக்கால மாந்தர்க்கு—உயிர்நாடியாக உள்ளது என்பதில் ஐயம் என்ன?

ஆடு, கோழி முதலிய பிராணிகள் அழகே உருவென வந்தவை; சாந்தத்துக்கு இருப்பிடமானவை; புறுவைக் கவனியுங்கள்: 'இல்லற இலட்சணத்தை உள்ளவாறு உணர்த்துவது புறு,' என்று இதிகாசங்கள் கூறுகின்றன. அஃது எவ்வளவு அழகாகவும் மென்மையாகவும் இருக்கின்றது! அதன் அழகு ஆண்டவனது அழகேயன்றோ! அழகைக் காண்கையில் அன்பு அரும்புகின்றது; யாவும் கடவுள் மயம் என்னும் தூய நினைவு எழுகின்றது. ஆ! கடவுளின் நினைவையூட்டும் இவ்வழகிய பிராணிகளின் இயல்புதான் என்னே!

கிராமங்களுக்குச் சென்று பாருங்கள்: அங்குள்ள குழந்தைகள் நாய்களோடும், பூனைகளோடும், கன்றுகளோடும் விளையாடிக்கொண்டிருக்கும். நாய்கள், பூனைகள், கன்றுகள், மாடுகள், பசுக்கள் முதலியன விலங்கினங்களெனக் கிராமவாசிகள் எண்ணுவதில்லை. தம்மக்களெனவே அவற்றை எண்ணி நடத்தி வருகின்றனர். அவை வீடுகளுக்குள் போவதையும் வருவதையும் காண்கையில், மிகப் பழக்கப்பட்ட சிறுவர்களைப் போலக் காணப்படுகின்றன.

எறும்புகளையும் தேனீக்களையும் பாருங்கள்: அவை ஒரு நிமிடமேனும் சும்மா இருக்கின்றனவா?

எந்த நிமிடமும் அவை வேலை செய்த வண்ணமாகவே இருக்கின்றன ; எறும்புகள் மழைக் காலத்துக்கு வேண்டிய உணவைக் கோடையிலேயே சேமித்து வைத்துக்கொள்கின்றன என்றால், அவற்றின் நுண்ணறிவை என்னென்பது ! அவ்வறிவு ஆறறிவு படைத்த நம்மிடத்தும் இல்லையே !

ஆகவே, அன்புள்ள பிள்ளைகளே, இவற்றால் நாம் அறிவது என் ? எத்தகைய பிராணியும் ஆண்டவனால் படைக்கப்பட்டது. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குண விசேடம் காணப்படுகிறது. அவை, இயற்கை யழகையும் இறைவன் அருட்பொலிவினையும் உணர்த்தப் போந்த தூதர்கள் என மதித்து, அவற்றிற்கு நாம் எள்ளளவும் தீங்கு செய்யாதிருத்தல் வேண்டும். நீங்கள் அன்பு என்னும் அருமருந்தால் அவற்றை உங்கள் வசமாக்கி, எல்லாம் அன்பு மயமாகத் திகழச் செய்யவேண்டும். அன்பே ஆண்டவன் அல்லவா ?

நலிதரு சிறிய தெய்வமென் றையோ !
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்
பலிக்கடா முதலிய உயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே
புந்திநொந் துளநடுக் குற்றேன் ;
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில்
கண்டகா லத்திலும் பயந்தேன். 1

கருணையே வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த
    கடுந்துயர் அச்சமா தியவைத்
தருணநின் னருளாற் றவிர்த்தவர்க் கின்பம்
    தரவும், வன் புலைகொலை யிரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலா நடக்க
    வுஞற்றவும், அம்பலந் தனிலே
மருவிய புகழை வழுத்தவும், நின்னை
    வாழ்த்தவும் இச்சைகாண், எந்தாய்! 2

—அருட்பா—இராமலிங்க அடிகள்

---

## 24. தமிழ் மொழி

ஆதியில் உலகம் முழுதும் உலவிய
    அமிழ்தெனுந் தமிழ் மொழியே!
மாதொரு பாகன் மகிழ்ந்தெமக் கீந்த
    மதுரத் தமிழ் மொழியே! 1

அன்று முதலா இன்று வரையில்
    அழியாத் தமிழ் மொழியே!
என்றும் இளமை குன்றா தழகுடன்
    இலங்குந் தமிழ் மொழியே! 2

காதுக்கினிய ஓசை ஒழுகும்
    கன்னித் தமிழ் மொழியே!
ஓதற் கினிய மொழிக ளனைத்தே
    ஓங்குந் தமிழ் மொழியே! 3

தாயுந் தந்தையுங் கொஞ்சி என்னைத்
தழுவிய தமிழ் மொழியே!
ஆயும் புலவர் கூடி நாடி
அறிந்த தமிழ் மொழியே! 4

தெலுங்கு கன்னடந் துளுமலை யாளந்
தோன்றுந் தமிழ் மொழியே!
இலங்குங் கோயில் எங்குந் தங்கும்
இசைமிகு தமிழ் மொழியே! 5

என்தன் செந்தமிழ் என்தன் செந்தமிழ்
என்று மகிழ் வேனே!
எந்தாய் மொழியென எந்தாய் மொழியென
எங்கும் புகழ் வேனே. 6

—மணி. திருநாவுக்கரசு முதலியார்

---

## 25. ஆனந்த நிலை

1. ஒருவன் குரோதத்தை வென்று, அதற்குக் காரணமான அறியாமையை அகல விட்டோட்டி, பிறரிடம் தீமையைக் கவனியாதிருக்கும் நிலையே ஆனந்த நிலை எனப்படும்.

—ஜேம்ஸ் ஆலன்

2. தான் செய்யும் ஒவ்வொரு செயலும் நன்மையா? தீமையா? என்பதை விவகரித்து, நன்மை செய்பவனே ஆனந்த நிலை எய்தியவன். —காந்தியடிகள்

'நான் செய்ய நினைக்கும் இச்செயல் யாவர்க்கும் இசைந்ததா? அல்லது என்னளவிலேனும் தவறற்ற

நன்மை தாவல்லதா? இதனால், என் மனம் நிறைந்த மகிழ்ச்சியைப் பெற இயலுமா?' என்ற வினாக்களை ஒருவன் ஒன்றன் பின் ஒன்றாகத் தனக்குத் தானே கேட்டுக்கொள்வானாயின், சிறந்த விடை காண்டல் எளிது. இங்ஙனமே, பள்ளிச் சிறுவனும், 'பள்ளிக்குச் செல்லும் யான் மாணவன் அல்லவா? என் கடமைகள் எவை? நான் ஏன் தினந்தோறும் படிக்கச் சோம்புகிறேன்? தினந்தோறும் என் கடமைகளைச் செய்தால் நன்மை என்? செய்யாவிடின் தீமை என்? என் பெற்றோர் என்னிடம் இருந்து எதிர்பார்ப்பதென்?' என்ற பல திறப்பட்ட கேள்விகளைத் தனக்குத் தானே கேட்பின், சிறந்த விடை கண்டு தெளிவான் அல்லவா? உண்மை விடை கண்ட பின்னர், அவன் உண்மை மாணவனாக விளங்குவான். அப்போது அவன் இருக்கும் நிலையே ஆனந்த நிலை எனப்பெறும்.

ஒருவனைச் சினந்து பேசிய வேறொருவன் அமைதி நிலவும் இன்பப் பூங்காவில் இனிதிருந்து, 'நான் ஏன் அவன்மீது சினங்கொண்டேன்? ஆம்; அவன் கூறியதில் என்ன தவறு இருக்கின்றது? நான் என் வருவாய்க்கு மேற்பட்ட செலவு செய்பவனே. அறிவின்றியே—யோசனை இன்றியே யான் செலவு செய்தேன் அல்லவா? இவ்வுண்மையைத் தானே அவன் கூறினான்? என்னைச் செந்நெறியில் திருப்பவன்றோ அவன் முயன்றான்? ஆ! நான் அவனைச் சினந்தது பெரும் பிழை. நான் எனக்கு நன்மை புரிய முயன்றானைச் சினந்த கொடியனானேன். இக்

கொடுமையை எங்ஙனம் போக்குவேன்? ஆம்; அவன் கூறிய வீண் ஆடம்பரத்தை அறவே விட்டு, வரவுக்கேற்ற செலவு செய்து, செந்நெறியில் வாழ்வதே எனது கடமை,' என உணர்ந்து, அதன்படி நடந்து வாழும் நிலையே இன்ப நிலை என்பது.

ஒருவன் தன் சலியா ஊக்கத்தாலும் உழைப்பாலும் முன்னேறுவதைக் கண்டு அழுக்காறு கொள்ளும் பொறுமையாளன் சோம்பேறி எனப்படுவான். அவன் சிறிது நேரம் சிந்திப்பானாயின், 'ஆ! நான் என் அவனிடம் பொறாமை கொள்ள வேண்டும்? அவன் எனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லையே? அவன் உழைத்து உழைத்து உயர் நிலையை யடைகின்றான். நானும் அவ்வாறு உழைத்தால், உயர் நிலையைப் பெறுவேன். ஆகவே, நான் வீணாக அவன்மீது பொறாமை கொண்டது தவறன்றோ? இக்குணம் மிகக் கேவலமானது. இஃது என்னைக் கெடுத்து வருகின்றது. இதனை வேரோடு களைந்து, யான் முன்னேறுவேன்,' என்பன போன்ற சிறந்த—தூய—முடிபுகள் அவன் உள்ளத்தே ஒளி விட்டுப் பிரகாசிக்கும். அந்நிமிட முதல் அவன் நல்லவனாவது திண்ணம்; தன் முடிபுகளின்படி உழைத்து உயர்நிலை எய்துவானாயின், அவன் பெறுவது ஆனந்த நிலையே.

பொதுவாக ஒரு வகுப்பில் படிக்கும் பிள்ளைகளில் இரண்டொருவரே முதன்மையாக இருத்தல் வழக்கமாக இருந்து வருகிறது. இதற்குக் காரணம் யாதெனப் பிற மாணவர் ஒரு நிமிடமேனும் சிந்தித்ததுண்டா?

அந்தோ! இவர்கள் இவ்வுண்மையை உணராததால் அன்றோ, தாழ்ந்த நிலையில் இருக்கின்றார்கள்? அவர்களும் இவர்களைப் போன்ற பிள்ளைகள் அல்லவா? அவர்களுக்குள்ள புத்தகங்கள், பாடங்கள் இவர்களுக்கும் இருக்கின்றன அல்லவா? அவர்களுக்குப் போதிக்கும் ஆசிரியர்களே இவர்களுக்கும் போதிப்பவர்கள் அல்லவா? 'பின், ஏன் இவர்கள் முதல் வரிசையில் இருப்பதில்லை?' என்ற வினாவைத் தங்களுக்குள்ளேயே கேட்டுப் பார்க்கட்டும்: அவர்களைப் போல முதல் வரிசையில் வரவேண்டும் என்ற ஊக்கம் இவர்கள் உள்ளத்தில் குடிகொண்டுள்ளதா? இல்லை! இல்லை!! இதுவே இவர்கள் வீழ்ச்சிக்குக் காரணம். இந்த ஊக்கம் உங்கள் உள்ளத்தில் பதியுமாயின், நீங்கள் உழைத்துப் படிப்பீர்கள்; வேலை செய்வீர்கள்; உங்கள் கடமைகளை நிறைவேற்றுவீர்கள். நீங்களும் அவர்களைப் போலவே முன்னணியில் வெற்றி வீரர்களாக விளங்குவீர்கள். அப்போது நீங்கள் இருப்பது எந்நிலை எனப் பெயர் பெறும்? ஆனந்த நிலை! ஆனந்த நிலை!

அன்புள்ள பிள்ளைகளே, இங்ஙனம் உங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு வேலையிலும் உங்களுக்குள்ளே கேள்விகளைக் கேட்டு, ஏற்ற விடை கண்டு, அவ்வண்ணம் நடப்பீர்களாயின், நீங்கள் எய்துவது ஆனந்த நிலையே!

---

## 26. நீ எங்கே?

நீல நிறமுள்ள வானத்தை யும், ஒளி
நித்தம் பரப்பும்மின் மீன்களையும்,
சால அழகுடன் காலையில் தோன்றிடும்
செவ்வானச் செல்வன் சிறப்பினையும்; 1

பாங்குற முத்துப் பதித்துவி ளங்கிடும்
பச்சைக் கம்பளம்வி ரித்ததுபோல்
விங்கும் பனித்துளி உச்சிமேற் றங்கியே
விளக்கமுற் றொளிரும்புற் றரையினையும்; 2

வானைத் தழுவும் மலைகளை யும்,அங்கே
வானுற நிற்கும் மரங்களையும்,
தேனைச் சொரியும் மலர்களை யும்,அதைத்
தேடித் திரிவண் டினங்களையும்; 3

பச்சைக் கிளைகளில் பண்போ டுலவிடும்
பச்சைக் கிளிகள்தம் கூட்டத்தையும்,
இச்சைப் படியுண்ண இன்கனி கள்தந்தே
இன்னிழல் நல்கும் மரங்களையும்; 4

மேகத் திடியினைக் கேட்ட வுடனஞ்சி
மெய்ச்சோர்வு கொள்ளும் குயில்களையும்;
மேகத் திடியினைக் கேட்ட வுடன்களி
மேதகக் கொள்ளும் மயில்களையும்; 5

ஐயறி வுள்ளவி லங்குகள் தம்மையும்,
அழகொளிர் ஆற்றுநீர் ஓட்டத்தையும்,

பையப் பரவிநற் பரவசம் நல்கிடும்
பாங்குறுந் தென்றல் எழிலினையும் ; 6

இன்னவை போல்பிற கண்டாலும் கேட்டாலும்
இயற்கை எழில்நலம் விண்டாலும்,
என் அப்ப ! உன்னை நினைந்து மகிழ்கின்றேன்;
என்னொரு வணக்கம் ஏற்பாயே. 7

எள்ளினுள் எண்ணெய்போல் எங்கு முளவுன்றன்
எழில்நலம் என்னென் றுரைப்பேனோ !
அள்ள அள்ளக்குறை யாத அமுதமே !
அண்ணலே ! என்று மகிழ்வேனோ ! 8

ஒவ்வொரு வரிடை ஓங்கி நிற்கும்உன்னை
உள்ளத்தா மரையினிற் காணாது,
கோவிலில் தான்குடி கொண்டுள்ளா யென்றங்கே
கோடி செலவிடல் ஈனமன்றோ ? 9

உன்னரும் படைப்பினில் உயர்வேது ? தாழ்வேது ?
ஒப்ப முடிந்தவோர் உண்மையன்றோ ?
மன்னனும் ஆண்டியும் ஒன்றென்னும் உயர்நிலை
மண்ணவர் எய்துவ தெந்நாளோ ? 10

—சி. வி. நாராயண ஐயர்.

---

## 27. கூட்டுறவு

1. உலக மக்களோடு சேர்ந்து, உலக வாழ்வில் கலந்துகொள். ஆனால், கடவுளிடத்தில் பற்றேடு நிற்பதை மறவாதே.

—ஞானேஸ்வரர்

2. வாழ்க்கை, கூட்டுறவுக்கென உண்டானதே யன்றித் தனிமைக்கு அன்று.

—வில்லியம் வோட்ஸ் வோர்த்

மேற்கூறிய இரண்டு பெருமக்களின் அமுத மொழிகளினின்றும் கூட்டுறவு—மக்கள் ஒருவரோடு ஒருவர் கலந்து உறவாடல்—இறைவனது பெரு விருப்பம்; அதற்கெனவே நாம் படைக்கப்பட்டுள்ளோம் என்பன விளங்குகின்றன அல்லவா ?

உலகில் கூட்டுறவு இன்றி எக்காரியமும் நடைபெருது. உலகில் புதிதாகப் பிறந்த குழந்தை தானே வளர முடியுமா என்பதை எண்ணிப் பாருங்கள். அதற்குத் தாயின் துணை இன்றியமையாத தன்றே ? தாயைக் காக்கத் தந்தை அவசியம்; தந்தையைக் காக்கத் தொழில் அவசியம். இங்ஙனே படிப்படியாகப் போனால், ஒருவர்க்கொருவர் இன்றியமையாத் துணையாவர் என்பது பெறப்படுகிறதன்றே ?

பெரும்பாலும் ஒவ்வொரு தந்தையும் பகல் முழுவதும் வேலைசெய்து மாலையில் களைத்து வீடு திரும்புதல் யாவரும் அறிந்ததே. அத்தந்தை, தம் களையைப் போக்கப் பிறரது உதவியை அல்லது கூட்டுறவை நாடுதல் இயல்பே. அவர் வீடு போந்ததும், மக்கள்

அவரைப் புன்முறுவலோடு வரவேற்கின்றனர். மக்கள் இல்லாவிடின், மனைவியோ, பிறரோ அவரை வரவேற்கின்றனர். எனவே, அவரது களைப்புற்ற முகம் களிகொள்கின்றது. வேலையில் உண்டான இன்ப துன்பங்களைத் தம் இல்லத்தினர்க்கு உரைத்து இன்பமோ துன்பமோ படுதல் மனிதர் இயற்கையாகின்றது. இவ்வாறே மாணவ மாணவிகளும் தங்களுடன் படிக்கும் பிள்ளைகளோடு கூடிக் குலாவுதல் இயற்கையாக அமைந்துள்ளது.

கூட்டுறவால் மக்கள் ஒருவருக் கொருவர் ஐயப்பாடுள்ள விஷயங்களைப் பற்றிக் கேட்டறிந்து தெளிகிறார்கள்; உதவி செய்கின்றார்கள்; ஒருவர் குற்றங்களை ஒருவர் மன்னித்து விடுகின்றனர்; ஒருவரை யொருவர் முன்னேற்ற முயல்கின்றனர். சுருங்கக் கூறின், கூட்டுறவால் அளவிடற்கரிய நன்மைகள் பெற இடமுண்டு.

இத்தகைய கூட்டுறவில் ஏழை—செல்வந்தன் கற்றவன்—கல்லாதவன் என்ற வேறுபாடுகளைக் கவனித்தல் தவறு. செல்வன் ஏழையை நன்னிலைக்குக் கொண்டுவரக் கடமைப்பட்டவன். கற்றவன் கல்லாதவனை மேனிலைக்குக் கொண்டுவரக் கடமைப்பட்டவன். ஒரே நாட்டில் ஏழை யென்றோ—செல்வன் என்றோ, கற்றவன் என்றோ—கல்லாதவன் என்றோ, வேறுபாடுகளை யுண்டாக்கிச் செல்வர் செல்வருடனும், கற்றோர் கற்றோருடனும் கூட்டுறவு கொள்வரே யானால், அதே நாட்டு ஏழைகள், கல்லார் இவர்களின் கதி

யாதாகும் என்பதைச் சிறிதே சிந்தித்துப் பாருங்கள்: இவ்வேறுபட்ட உணர்ச்சிகள் சமூகத்தில் இருப்பின், அதனைச் சமூகம் என்று சொல்ல நாவெழுமா? 'நாங்கள் ஒரே நாட்டவர்' என்று கூறத்தான் மனம் துணியுமா? ஒருவரை யொருவர் பகைவாராகக் கருதி அழிவரே யன்றி, இவர்களால் சமூகமோ, நாடோ, மக்களோ முன்னேற்றம் பெற முடியாது! முடியாது!!

ஆதலின், கூட்டுறவு என்பது உயர்வு—தாழ்வு என்ற வேற்றுமை யின்றி, மக்கள் ஒன்றுபட்டுக் கலந்து வாழ்தல் எனப்படும். களங்கமற்ற மனமே இதற்கு வேண்டற்பாலது. எம்மதத்தினர் ஆயினும், எச்சமயத்தவர் ஆயினும், எச்சாதியினர் ஆயினும், எம்மொழியைப் பேசுபவர் ஆயினும், எந்நிறத்தா ராயினும், சிறிதும் வேறுபாடின்றி மனமொழி மெய்-களால் கலந்து மகிழ்தலே கூட்டுறவு எனப்படும். இக் கூட்டுறவால், நிற வேற்றுமை, தொழில் வேற்றுமை, சாதி வேற்றுமை, சமய வேற்றுமை, மத வேற்றுமை முதலாய கொடுமைகள் ஒழிந்து, ஒரு நாட்டில் உள்ள பல வகைப்பட்ட மக்கள் ஒரு தாயீன்ற செல்வர்களைப் போலச் சுகமுற்றுச் சமத்துவத்துடன் வாழ இயலும். மக்கள் சமத்துவத்தால் ஒற்றுமை யேற்படும். ஒற்று-மையால் வலிமை பெருகும்; அந்நிலையில் நாடு மிக உயர்ந்த நிலையை யடையும்.

மேனாடுகள் ஓரளவேனும் உயர்ந்த நிலையில் இருப்பதால், அவை செல்வத்திலும் ஒற்றுமையிலும்

சிறந்தவையாக இருக்கின்றன. ஆனால், நமது தாய் நாடான இந்தியா கூட்டுறவினால் போதிய நன்மை பெறவில்லை. எனினும், மக்கள் யாவரும் ஒன்றெனும் உணர்ச்சி மெல்ல மெல்ல நம் மக்கள் மனத்தில் பதிந்து வருதல் போற்றத் தக்கது. மக்கள் சமூகம் கூட்டுறவால் ஒன்றுபட்டாற்றான், எளிய நிலையில் உள்ள நம் தாய்நாடு உயர்ந்த நிலையைப் பெற வியலும்.

அத்தா! நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்;
அருட்பெருஞ்சோ தியைப்பெற்றே அகங்களித்தல் வேண் [டும்;
சேத்தாரை மீட்டுமிங்கே எழுப்பியிடல் வேண்டும்;
திருச்சபைக்கே யடிமைகளாச் செய்வித்தல் வேண்டும்;
ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமையுள ராகியுல கியல்நடத்தல் வேண்டும்;
எத்தாலும் அழியாத வடிவதிலே நானும்
எந்தாயும் ஒன்றாக இனிதுறல்வேண் டுவனே.

—அருட்பா—இராமலிங்க அடிகள்

---

## 28. உண்மையுடைமை

1. உண்மையே கடவுள். —காந்தியடிகள்

2. உண்மையே யாவற்றையும் வெல்லும். —உபநிடதங்கள்

'உண்மையே மதம்; உண்மை யுடையான் மதமுடையான், ஒழுக்க முடையான்' என்று நம் இதிகாசங்கள் கூறுகின்றன. உலகில் உள்ள எல்லா மதங்களும் 'உண்மையே உயிர்நாடி' என முழக்குகின்றன. ஆகவே, உண்மையுடைமை என்பது ஒவ்வொருவருக்கும் இன்றியமையாச் சிறந்த அணி என்பது தேற்றமன்றோ?

உலகில் ஒருவரை யொருவர் விரும்புவதும், ஒருவரோடு ஒருவர் வாழ்தலும் உண்மை யுடைமையாலேயே என்க. உண்மை யின்றேல், குடும்பத்தில் ஒற்றுமை நிலவாது; ஒருவரை யொருவர் நம்பார்; உயர்ந்த நோக்கங்கள், எண்ணங்கள், ஒழுக்கம் இவை நசித்துப்போம். முதலாளி தொழிலாளியை நம்ப முடியாது; தொழிலாளி முதலாளியை நம்ப முடியாது. அரசன் தன் உத்தியோகஸ்தரையும் குடிகளையும் நம்ப இயலாது; உத்தியோகஸ்தரும் குடிகளும் வேந்தனை நம்ப இயலாது. எனவே, உண்மை யின்றேல், மக்கள் சமூகம் எத்தகைய கேவல நிலையை அடையும் என்பதைச் சிறிதே சிந்தித்துப் பாருங்கள்.

பொய்யுரைப்போன் பொய்யான—சீர்கேடான வழியிலேயே நடக்கத் தலைப்படுவான். தொழிலாளியோ, முதலாளியோ, அரசனே, உத்தியோகஸ்தனே, குடியானவனே பொய்யனா யிருப்பின், அவன் எத்தகைய தீய காரியத்தையும் செய்யப் பின்வாங்கான்; தீய எண்ணங்கள், தீய செயல்கள் இவற்றில் ஈடுபட்டு, இயற்கையா யமைந்த அன்பு உடலை மாற்றித் தீய—பயங்கர உடலை—முகத் தோற்றத்தை யடைகின்றான். அந்தோ! இத்தகைய ஒருவனால் அவனது குடும்பமோ, சமூகமோ, நாடோ எவ்வளவு சீர்கேடான நிலையை எய்தும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

அரசன் தன்னை இரட்சகனாகக் கருதியுள்ள குடிகளுக்கு உண்மையுள்ளவனாக நடந்துகொள்ளல் வேண்டும். முதலாளி தன்னை நம்பி வேலை செய்யும் ஏழைத் தொழிலாளனிடம் உண்மை யுடையவனா யிருத்தல் வேண்டும். ஆசிரியன் தன்னை நம்பியுள்ள பிள்ளைகட்கு உண்மையுள்ளவ னாயிருத்தல் வேண்டும். இங்ஙனமே மக்கள் ஒருவரை யொருவர் நம்பி யிருத்தலால், ஒருவர்க்கு ஒருவர் உண்மையுடையராய் இருத்தல் வேண்டும்.

ஒரு காட்டில் ஒரு நாள் இடைச்சிறுவன் ஒருவன் சில ஆடுகளை மேய்த்துக்கொண்டு இருந்தான். அப்போது அந்நாட்டு அரசன் குதிரைமீது அங்குத் தோன்றினான். அவன் தாகத்தால் வருந்திக் களைப்புற்றிருந்ததால், சிறுவனை நோக்கி, "தம்பீ, இங்குத் தண்-

ணீர் கிடைக்குமா?" என்றான். சிறுவன், "ஐயா, இந்தப் பாதை வழியே சென்றால், ஒரு குளம் இருக்கக் காண்பீர்; அங்கு உமது தாகத்தைத் தணித்துக்கொள்ளும்," என்றான்.

அரசன், "சிறுவனே, நான் இவ்வூருக்குப் புதியவன். எனக்கு நீ சொன்ன வழியே செல்வது கடினமாகும். நான் உன் ஆடுகளைப் பார்த்துக்கொள்கிறேன்; நீ சென்று தண்ணீர் கொண்டுவா," என்றான். அதைக் கேட்ட சிறுவன், "ஐயா, நன்று சொன்னீர்; நீரோ புதிய மனிதர். உம்மை நம்பி என் ஆடுகளை விடலாமா? ஓநாய் வந்து ஆட்டைத் திருடிக்கொண்டு செல்லுமே; நான் போக முடியாது," என்றான்.

அரசன், "பையா, நான் மிக்க ஜாக்கிரதையுடன் பார்த்துக்கொள்கிறேன். நீ சென்றுவா," என்றான். சிறுவன், "ஐயா, உம்மை நான் எப்படி நம்ப முடியும்? என் எசமானர் என்னை நம்பித் தம் ஆடுகளை என்னிடம் ஒப்புவித்து இருக்கிறார். அத்தகையவருக்கு நானும் உண்மையுள்ளவனாக இருத்தல் அவசியம் அல்லவா? உம்மை நம்பி நான் விட்டுச் செல்ல, நீர் இன்னொருவனை நம்பி இவ்வாடுகளை விட்டுச்செல்வீர் அல்லவா? இஃது இயலாத காரியம். நான் போக முடியாது. உமக்கு நான் உதவி புரிய விரும்புகிறேன். என்றாலும், இப்போது முடியாது," என்று உறுதியாகக் கூறினான்.

சிறுவனது சீரிய குணத்தைக் கண்ட வேந்தன் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தான். அவ்வமயம் அவன் பரிவாரங்கள் அவ்விடம் போந்தன. பரிவாரங்களைக் கண்ட இடைச்சிறுவன், "ஓ! இவர் அரசர் போலும்! எனினும் என்? நாம் நியாயமென உணர்ந்ததையே கூறினோம்," எனத் தனக்குள் கூறிக்கொண்டான்.

வேந்தன், சிறுவனை அன்புடன்நோக்கி, "சிறு-வனே, நீ மிகவும் நல்லவன்; உண்மையுடையவன். உன்னைப் போன்ற உத்தமன் ஒருவனையே நான் தேடிக்-கொண்டிருந்தேன். நீ என்னுடன் இருக்க விரும்பு-கின்றனையா?" என்றான். சிறுவன், "அரசே, என் எசமானர் என்னைத் தங்களிடம் இருக்க அனுப்பினால், எனக்குச் சம்மதமே," என்றான்.

அரசன் சிறுவனின் எசமானரைக் கண்டு, தம் விருப்பத்தைக் கூற, அவரும் அதற்கு உடன்பட்டார். இடைச்சிறுவன் அரண்மனையை யடைந்து, அரசன் ஆதரவில் கல்விகற்று அரசனது அன்புக்குப் பாத்திர-னானான்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 1

பொய்யாமை பொய்யாமை யாற்றின், அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. 2

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 3

—திருக்குறள்—திருவள்ளுவர்

———

## 29. முன்னேற்ற வாழ்வு

ஆடு தம்பி! விளை யாடு தம்பி!
'அன்பே ஆண்டவன்'என் றாடு தம்பி!
'பாடுபட் டுழைப்போம்'என் றாடு தம்பி!
'படித்தாற் பயனுண்டெ'ன் றாடு தம்பி! 1

'ஒழுக்கம் உயர்ந்ததெ'ன் றாடு தம்பி!
'உண்மைபேசி வாழ்வோம்' என் றாடு தம்பி!
'தாழ்வளிக்கும் கோபம்' என் றாடு தம்பி!
'தாய்தந்தை தெய்வம்' என் றாடு தம்பி! 2

'அஞ்சாமை வேண்டும்' என் றாடு தம்பி!
'அரியவீ ரராவோம்' என் றாடு தம்பி!
'நெஞ்சாரத் தீதொழி' என் றாடு தம்பீ!
'நம்பிக்கை நலந்தரும்' என் றாடு தம்பி! 3

'நாட்டுச் சேவை செய்வோம்' என் றாடு தம்பி!
நம்தாய் நாடென் றுமகிழ்ந் தாடு தம்பி!
'வீட்டுவேலை செய்வோம்' என் றாடு தம்பி!
'உழவை உயர்த்துவோம்' என் றாடு தம்பி! 4

'கைத்தொழிலைச் செய்வோம்' என் றாடு தம்பி!
'கவலை யொழிப்போம்' என் றாடு தம்பி!
'கைத்தொழிலே சோறிடும்' என் றாடு தம்பி!
'கணக்கற்றோர் பிழைப்பார்' என் றாடு தம்பி! 5

'குலம் ஒன்றே என்றும்' என்றுடு தம்பி!
    'குணத்தையே கொள்வோமெ'ன் றுடு தம்பி!
'பலம்நமக் குள்ளதெ'ன் றுடு தம்பி!
    'பகையை யொழிப்போம்' என்றுடு தம்பி! 6

'இந்தியர்ஓர் குலத்தார்' என்றுடு தம்பி!
    'எல்லோரும் சோதரர்' என்றுடு தம்பி!
'சந்தேகம் ஒழிப்போம்' என்றுடு தம்பி!
    'சத்தியம் வெற்றிதரும்' என்றுடு தம்பி! 7

'விதைப்பதே விளைவிங்கெ'ன் றுடு தம்பி!
    'வினையைத் தகர்ப்போம்' என்றுடு தம்பி!
'கதைகள் வேண்டா' என்றே ஆடு தம்பி!
    'கண்கூடாக் காட்டுவோம்' என்றுடு தம்பி! 8

—மா. இராசமாணிக்கம்

---

Printed at The Imperial Printing Works, Madras.